# கம்ப களஞ்சியம்

[கம்பன் பேரிலான ஆக்கங்களின் தொகுப்பு]

பதிப்பாசிரியர்


க. இரகுபரன் (B. A. Hons)

(அமைப்பாளர், ஊரெழுக் கம்பன் கழகம்)






**அகில இலங்கைக் கம்பன் கழகம்**

'கம்பன் கோட்டம்', 300, கோவில் வீதி,

நல்லூர், இலங்கை.

நூல்: கம்ப களஞ்சியம்

முதற் பதிப்பு: ஏப்பிரல், 1993

கம்பன் கழக வெளியீடு - 4

விலை: ரூபா 120/-

அச்சுப் பதிப்பு: தாசன் அச்சகம், யாழ்ப்பாணம்.

அட்டை அமைப்பு: ஞானம்ஸ் ஆர்ட்

*அகில இலங்கைக் கம்பன் கழகம்*
*நடத்திய கம்பன் விழாவில்*
*02 - 04 - 93 அன்று*
*யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்*
*தமிழ்த்துறைத் தலைவர்*
*பேராசிரியர் அ. சண்முகதாஸ் அவர்களால்*
*வெளியிடப்பெற்றது.*

# முன்னுரை

தமிழுலகின் தலைமைக் கவிஞன் கம்பன்;
அவன் சர்வதேசியத்தரம் வாய்ந்தவொரு தமிழ்ப் புலவன்.

வடமொழியில் வான்மீகி எழுதியதை வெறுமனே தமிழ் மொழியிற் பெயர்த்தோம் என்று அமையாமல் தமிழ் மரபையும் தன் தனித்துவத்தையும் கவித்துவத்தையும் நிலைநிறுத்திக் காட்டியவன் அவன் படைத்தது நவில் தொறும் நயம் பயப்பதோர் உயர்நிலைக் காப்பியம்.

கம்பனுக்கு வந்துசேர்ந்த வானுயர் பெருமை எல்லாம் இராமாவதாரம் என்ற பெயரில் அவனால் இயற்றப் பெற்ற அக் காப்பியம் ஒன்றினால் வந்தவையே. அவனுக்குப் பெருமை சேர்க்க வேறுகாரணம் எதுவும் வேண்டியிருக்க வில்லை; இனியும் வேண்டப்போவதில்லை.

எனினும் கம்பன், இராமாயணக் காப்பியம் தவிர வேறும் சிலவற்றையும் இயற்றினான் என்றுகருதப்பட்டு வருவதையும் மனங்கொள்ள வேண்டியவர்களாகவே உள்ளோம்.

சரஸ்வதி அந்தாதி, சடகோபரந்தாதி, மும்மணிக்கோவை' ஏரெழுபது, திருக்கை வழக்கம் என்னும் ஐந்து நூல்களும் வேறுசில தனிப்பாடல்களுமே அவ்வாறு கம்பனது ஆக்கங்களாகக் கருதப்பட்டு வருவன.

கம்பனது காவியம் கிடைக்கப்பெறாமல் அவனது பெயரைச் சொல்ல இந்நூல்கள் மாத்திரம் கிடைத்திருக்குமாயின் கம்பனைச் சாதாரண புலவர்களுள் ஒருவனாகவே

கணிப்பிடவேண்டி இருந்திருக்கும். காரணம் காவியத்தில் உள்ள தனிப்பெருஞ் சிறப்புக்களை இவற்றுள் முழுமையாகத் தரிசிக்க முடியாது இருப்பதே.

எனினும் ஏதோ ஒருவகையில் இந்நூல்களுக்கும் சிற்சில தனித்துவங்கள் இருப்பதாகக் கொள்ளலாம் என்றே கருதவேண்டியுள்ளது. உதாரணமாக கலைஞானம் மிக்க புலவர்கள் சிவன், திருமால் முதலான பெருந் தெய்வங்களைப் பாடு பொருளாகக் கொண்டு நூல்கள் செய்து வந்த காலத்தில் கலைத் தெய்வமான சரஸ்வதியை தனி நிலைப்படுத்தி எழுந்த முதல் தனிநூல் என்ற தனித்துவம் 'சரஸ்வதி அந்தாதி'க்கு இருப்பதாகக் கொள்ளலாம்.

அதுபோலவே மதுரகவி ஆழ்வாரின் பதிகம் ஒன்று நீங்கலாக நோக்கும்போது வைணவ ஆழ்வார் ஒருவர் பற்றிய முதல் தனிநூலாக சடகோபரந்தாதி அமைதல் கூடும்.

ஒரு தொழிலை அதுவும் உழவுத் தொழிலைப் பாடு பொருளாகக் கொண்டு மிக எளிய நடையில் அமைந்தது ஏரெழுபது. ஒட்டக்கூத்தர் பேரிலும் ஓர் 'ஏரெழுபது' உண்டு. இருவரும் ஒரே காலத்தவராதலால் கம்பன் பேரிலானதை முந்தியது என்று கூறமுடியாதுள்ளது ஏரெழுபது போலவே உழவரின் சிறப்பை, குறிப்பாக அவர்தம் கையின் சிறப்பைப் பாடுவது திருக்கை வழக்கம். திருக்கை வழக்கத்தில் வரும் செய்திகளை நோக்க அது சைவப் பாரம்பரியத்தில் வந்த ஒருவராற் பாடப்பட்டதாகவே தெரிகிறது. சடையப்ப வள்ளல் என்ற வேளாளராற் புரக்கப்பட்ட கம்பன் அவரைத் தன் காப்பியத்திலேயே பாடிச் சிறப்பித்தவன், அத்தகையவன் அவர் குலத்தைச் சிறப்பிக்கு முகமாக இந்த இரு நூல்களையும் பாடினான் என்று கொள்வதற்கும் இடம் உண்டு.

எது எவ்வாறாயினும் கம்பன் பேரில் இத்தனை நூல்கள் இருக்கின்றன என்ற ஒருசெய்தி பொதுவானதோர் உலகுக்கே

அன்றி படித்தவர் சிலர்க்கும் கூட புதினமானதொரு செய்தியே. அறிந்தவர்களுக்குப் பழைய செய்தி மாத்திரமன்றி பூரண உடன்பாடுடைய வொரு செய்தியும் அல்ல.

அத்தகைய ஐயப்பாட்டுக்கு உரியனவேயாயினும் கம்பன் பேரிலான இந்நூல்கள் கைக்கு எட்டுவனவாக இல்லை. இதுவரையில் ஓரிரு பதிப்புக்களை மாத்திரமே கண்டு பிரதிகள் அருகிய நிலையில் இருக்கின்றன. கம்பன் பேரிலான ஆக்கங்களை ஒருசேரப்பார்க்க விரும்புபவர்களுடைய எண்ணம் ஈடேறக் கூடியதாக இல்லை. ஆய்வாளர்கள் பிரதிகள் இல்லாமல் அங்கலாய்க்கிறார்கள்.

இவற்றையெல்லாம் உணர்ந்த நிலையில்தான் அகில இலங்கைக்கம்பன்கழகம் கம்பன் பேரிலான ஆக்கங்களை ஒரு தொகுப்பாக வெளியிட முன்வந்தது. அந்த முயற்சியில் எவ்வளவு முயன்றும் 'மும்மணிக்கோவை' எமது கைக்கு எட்டவில்லை. அதுகிடைக்காத ஒரு மனநெருடலோடே 'கம்ப களஞ்சியம்' என்ற பெயரில் ஏனைய ஆக்கங்கள் மாத்திரம் ஒரு தொகுப்பாக வெளியிடப்படுகின்றன.

மும்மணிக்கோவை நீங்கலாகக் கிடைத்த ஏனைய நூல்கள் கூட நம்பகமான பிரதிகளாக அமைந்தன என்று கூறமுடியவில்லை. அவற்றிடையே பல பாடபேதங்கள் உள்ளமை எம்மால் உணரப்படுகிறது. குறிப்பாக ஏரெழுபது, மிகுந்த பாடபேதங்களும், பாடலொழுங்கு மாறுபாடுகளும் உடையதாகத் தெரிகிறது. தொகுப்பில் அமைந்த திருக்கை வழக்கம் நாவலர் பதித்தபடி அமைகிறது. சென்னை தேனருவிப் பதிப்பக வெளியீடாக, புலியூர்க்கேசிகன் பதித்த வேறொரு பிரதியும் கிடைத்தது. ஆனால் நாவலர் பதித்ததற்கும் இதற்குமிடையில் 'இரண்டும் வேறு வேறுபாடல்களோ' என்று கருதத்தக்க அளவுக்கு மிகுந்த வேறுபாடுகள்இருக்கின்றன. பாடபேதங்களைச் சுட்டுவதை விட அவற்றை அப்படியே தருவது நல்லது என்று கருதி புலியூர்க் கேசிகனுடையதைப் பின்னிணைப்பாகத் தந்துள்ளோம்.

கம்பன் பேரிலான தனிப்பாடல்களிற் பெரும்பாலா னவை இரத்தினநாயகர் ஸன்ஸ் பதித்த தனிப்பாடல் திரட்டின் முதலாம் இரண்டாம் பாகங்களிலிருந்து எடுக்கப் பட்டவை. ஆனால் தனிப்பாடல் திரட்டில் 'கம்பன்' என்று தலைப்பிட்டுத் தரப்பட்ட பாடல்கள்பல கம்பன் பாடியதாக அல்லாமல் கம்பனுடைய வாழ்க்கையில் அவனோடு தொடர் புடையவர்களால் அவனோடு தொடர்புபட்ட சந்தர்ப்பங் களின்போது பாடப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அத் தகைய பாடல்களை நாம் நீக்கியுள்ளோம்.

கம்பன் பாடியனவாகக் குறிப்பிடப்படும் சில பாடல்கள் தனிப்பாடல்திரட்டிற் காணப்பெறாமல் தமிழ் நாவலர் சரிதை, பாவலர் சரித்திர தீபகம் என்பவற்றிலிருந்தும் எடுக்கப்பட் டன. இவைதவிர வேறு தனிப்பாடல்களும் கம்பன் பெய ரில் வழங்கக்கூடும். தொகுக்கப்பட்டுள்ள பாடல்களின் சந்தர்ப்பக்குறிப்புக்கள் அவ்வந்நூல்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவையே.

இப்பதிப்பில் அமையும் செய்யுட்கள் சாதாரண தமி ழறிவு உடையவர்க்கும் பொருள்விளங்க வேண்டும் எனும் விருப்பில் இயன்ற அளவில் பதம் பிரித்துத் தரப்பட்டுள்ளன. ஆனால் அப்பதப்பிரிப்பில் ஒரு நியமம் பின்பற்றப்பட வில்லை என்பதையும் கூறவே வேண்டும்.

சில பகுதிகளின் அரும்பதங்களுக்குப் பொருளும் தரப் பட்டுள்ளது. கால அவகாசமின்மையால் எல்லாவற்றுக்கும் அதனைச் செய்யமுடியவில்லை.

'மும்மணிக் கோவை'யையும் சேர்த்து ஏனையவற்றுக் கும் பாடபேத ஆய்வினையும் மேற்கொள்ளும் போதே இப் பதிப்பு பூரண நிறைவுள்ளதாய் அமையும்.

மும்மணிக்கோவையும் மற்றையவற்றின் வேறு பிரதி களும் உள்ளவர்களின் கையிலேயே இனி அப்பணி தங்கி யுள்ளது. அவர்கள் துணைசெய்வார்களாக!

இக்குறுகிய காலத்தில் இவ்வளவிலாயினும் இத்தகைய ஓர் பதிப்பு முயற்சியை மேற்கொள்ளக் கிடைத்தது ஒரு பெருவாய்ப்பே.

பாரிய பொறுப்பினை எம்மை நம்பி ஒப்படைத்தவர்கள் உலகின் வியப்பிற்கும், எமது நன்றிக்கும் உரியவர்கள்.

நூல் தொகுப்பு முயற்சியில் கவிஞர் கல்வயல் குமாரசாமி அவர்களின் பங்கும் பிரதிகளைத்தந்துதவிய திரு. க. நாகேஸ்வரன், திரு. சி. சிவலிங்கராஜா ஆகியோரின் ஒத்துழைப்பும், பிரதி செய்வதில் துணைநின்ற செல்வி கலாநிதி சண்முகநாதபிள்ளை, செல்வி ஏ. பாலசிங்கம் ஆகியோரின் உதவியும், அணிந்துரை வழங்கிப் பெருமை செய்த பேராசிரியர் சண்முகதாஸ் அவர்களின் அன்பும் எமது பெருநன்றிக்கு உரியன.

இந்நூல் வெளிவருவதில் தாசன் அச்சகத்து நிர்வாகிகளும் ஊழியர்களும் காட்டிய அக்கறை சொல்லுந்தரமன்று.

இப்பதிப்புக்கு அமைந்த புற மெருகு திரு ஞானசேகரம் அவர்களால் வந்தது.

எல்லோர்க்கும் எமது நன்றிகள்.

'அசோகமனை', ஊரெழு.
02-04-1993

க. இரகுபரன்

# வெளியீட்டுரை

கம்பன் கழகப் பணிகளில் நூல் வெளியீடும் ஒன்றாக வேண்டும் என்பது, எம்மை ஆற்றுப்படுத்திய அமரர் வித்துவான் சி. ஆறுமுகம் ஐயா அவர்களின் பெருவிருப்பங்களுள் ஒன்றாகும். அவ்விருப்பத்திற்கு இணங்க அவரின் 'திருக்கேதீஸ்வரநாதர் வண்டுவிடு தூது' கழகத்தின் முதல் வெளியீடாயிற்று. அதைத்தொடர்ந்து, எமது கழகத்தின் முன்னாள் பொருளாளர் மாணிக்கவாசகரின் தந்தையாரின் ஞாபகார்த்தமாக வந்த 'வாலி வதைப் படல'மும், நண்பர் அகளங்கனின் 'வாலி'யும் கழகப் பதிப்பாய் மலர்ந்தன.

கழகம் வளர்ச்சியுறா நிலையில் வெளிவந்தமையாலும், பதிப்புரிமையில் பெயருக்காகக் கழகம் ஒட்டிக் கொண்டதாலும் அவ்வெளியீடுகளினால் கழகமும் பெருமை பெறவில்லை, வெளியீடுகளும் முழுமையாகப் பெருமையுறவில்லை.

கழகத்தார் எதைச் செய்தாலும் அதில் ஒரு தனித் தன்மையும் இரசனையும் அழகும் இருக்கும் என்பது இலக்கிய உலகின் நம்பிக்கையாயிற்று. இதுவே கழகத்தின் வளர்ச்சிப்பாதையில் இன்றைய நிலை,

இந்நிலையில் பெயரளவில் கழகவெளியீட்டில் நாலாவதாய் அமைந்தபோதும், கழகத்தின் முதல் வெளியீடாய், முழுமையாய் இக் 'கம்பகளஞ்சியம்' வெளிவருகிறது.

கம்பராமாயணம் முழுமையும், பதிப்பிக்கும் விருப்பம் நிறைந்திருந்தாலும், அது தற்போதைய நிலையில் நம்

சக்திக்கு அப்பாற்பட்ட விடயம். எனத் தெளிந்து நம் முயற்சியைத் தற்காலிகமாகக் கைவிட்டோம்.

"கம்பன் கழகப் பத்தாண்டு நிறைவு மலரை" அச்சேற்ற முனைந்தபொழுது, கம்பனின் பிற ஆக்கங்களைத் தொகுக்கும் இவ்வெண்ணம் உதித்தது. மலர்ப்பணியை அப்போது பொறுப்பேற்றிருந்த கழகத்தின் பேரன்பர் கவிஞர் கல்வயலார் (கல்வயல் குமாரசாமி) பெரிதும் முயன்று இப்பணியின் பெரும்பகுதியை நிறைவு செய்திருந்த போதும் நாட்டுச்சூழலால் அம்மலர் அச்சேறாமல் போயிற்று.

பின், இவ்வாண்டுக் கம்பன் விழாவில் நூலொன்றை வெளியிடும் முடிவு உறுதியானபோது, மலருக்காகத் தொகுத்தவற்றோடு மேலும் சில சேர்த்துத் தனி நூலாய் வெளியிடும் இவ்வெண்ணம் தலைப்பட்டது. குறுகிய காலத்தில் தலையாய இப் பெரும்பணியை நம் கழகப் 'பிள்ளை', பல்கலைக்கழகத் தமிழ்த்துறை உதவி விரிவுரையாளர் தம்பி இரகுபரனிடம் ஒப்படைத்தோம். அவர்தம் புலமைக்கு, இப்புத்தகப்பணி புல்லியதாயிற்று. இதனால் "கம்பகளஞ்சியம்" நிறைவுற்றுப் பொலிந்தது.

இந் நூலாக்கத்தில் கழகத்தின் பெருமை காக்கப் பெரிதும் துணைபுரிந்தஅச்சகத்தார், அட்டையினை அழகுற அமைத்துத் தந்த கழகநண்பர் ஆ. ஞானசேகரம், மற்றும் பலவாறு துணைநின்ற கழக அன்பர்கள் அனைவரையும் நன்றியோடு வணங்குகின்றோம்.

நூலாக்கம் தொடங்குகின்றோம் என்றதும், தலை நிமிர்த்திப் பலம் கொடுத்த கழகக்காவலன், சந்திரபோஸ் அவர்களை நெஞ்சாரப் போற்றுகிறோம்.

அறிவுக்கும், ஆய்வுக்குமாய்ப் பயன்படப்போகும் இக் 'கம்பகளஞ்சியத்தை' தாயாய் நின்று எம் கழகத்தை இது

வரையும் வளர்த்துவரும் தமிழ் மக்களின் கைகளிலே தந்து பெருமையுறுகிறோம்.

தங்கள் அன்பால், இவ்வெளியீட்டுப்பணி சிறப்புற்றுத் தொடருமென நம்பிப்பணிகின்றோம்.

நன்றி

''கம்பன் புகழ் பாடிக்கன்னித் தமிழ் வளர்ப்போம்''

கம்பன் கோட்டம்,
300, கோவில் வீதி,
நல்லூர்.

க. குமாரதாசன்
செயலாளர், கம்பன் கழகம்,

# அணிந்துரை

கம்ப களஞ்சியம் என்றொரு நூலைக் கம்பன் கழகம் வெளியிடுவது மிகப் பொருத்தமானதும், பயனுள்ளதுமான ஒரு செயற்பாடாகும். தமிழிலக்கியத்தின் உயர்ச்சி மிகு புகழை எல்லாம் தன் புகழாக்கிக் கொண்ட பெருங்கவிஞர் கம்பர். தமிழறிஞர்களாலும், மன்னர்களாலும், சமய உணர்ச்சி மிக்கவர்களாலும் போற்றப்பட்டு நினைவு கூரப் பட்ட கவிஞர்கள் பலர். ஆனால் மக்களிடையேயும் இத் தகைய புகழையும், ஆதரவையும் பெற்ற கவிஞர்கள் மிகச் சிலரே. அத்தகையவர்களுள்ளே முதலில் வைத்து எண்ணத்தக்கவர் கம்பர் ஆவார்.

கம்பருடைய புகழுக்கும் கல்வியறிவுக்கும் அவர் பாடிய இராமாயண காவியம் ஒன்றே உரைகல்லாக அமைவதற் குப் போதுமானது. உலக அரங்கிலே வைத்து எண்ணத் தக்க இந்நூலை இயற்றிய இப்பெருமகன் பிறந்த கார ணத்தால் தமிழ்மண்ணே பெருமையடைகின்றது. ''கம்பன் பிறந்த தமிழ்நாடு'' என்று பாரதி பாடுகிறார். இவ் வாறு கம்பராமாயணம் ஒன்றே கம்பரின் புகழுக்குப் போதுமானதாக அமையினும், அவராலே இயற்றப்பட்ட ஏனைய ஆக்கங்களாக ஏர்எழுபது, திருக்கை வழக்கம், சரஸ்வதி அந்தாதி, சடகோபரந்தாதி, மும்மணிக்கோவை என்னும் நூல்களும் சில தனிப்பாடல்களும் குறிப்பிடப் பட்டு வந்துள்ளன. இவற்றுள்ளே மும்மணிக்கோவை தவிர்ந்த ஏனையவை யாவும் கம்பகளஞ்சியம் என்னும் இந்நூலிலே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

கம்பராமாயணம் பற்றியறிந்தவர்கள், அதனைப் படிக்க விரும்புவதும் இயல்பு, கம்பராமாயணத்தைப் படித்தவர் கள் கம்பருடைய ஏனைய ஆக்கங்களையும் தேடிப்படிக்க

விழைவர். அத்தகைய நூல்தேட்ட ஆய்வாளர்களுக்கும், ஆர்வலர்களுக்கும் 'கம்பகளஞ்சியம்' பயன் நல்கும் தொகுப்பு நூலாக அமையும். கம்பராமாயணம் மூலமாக கம்பரை அறிந்தவர்கள், அவரது புலமைச் சிறப்பை உணர்ந்தவர்கள், மதிப்பீட்டு நிலையிலும் கம்பகளஞ்சியத் தைக் கற்க முற்படுவர். அத்தகையவர்களுக்கு தொகுப்பு நூல் என்ற வகையிலே, ஒரு நோக்கிலே கம்பரது பிற இலக்கியங்களைப் பார்ப்பதற்கும் இந்நூல் பெரிதும் உதவும்.

ஏர் எழுபது என்னும் ஆக்கம் பெயர் நிலையிலே எழு பது பாடல்களைக் கொண்டமைந்ததை விளக்குகிறது. 'உழும் குலத்தில் பிறந்தாரே உலகு உய்யப் பிறந்தாரே' என உழவர் புகழை அது பாடுகிறது. கம்பர் வாழ்ந்த காலம் உழவர் தொழில் மதிக்கப்பட்ட காலம். எல்லாத் தொழில்களிலும் உழவுத் தொழிலே முதன்மை பெற்றி ருந்த காலம். நாட்டுவளமும், மக்கள் வாழ்வு நிலையும் சாதாரண சமூகநிலையிலே சிறப்புற்றிருந்ததை ஏர்எழுபது எடுத்துக் காட்டுகிறது. உழவுத் தொழிலின் தன்மைபற்றி விரிவாகவும், விளக்கமாகவும் அது செய்திகளைப் பதிவு செய்துள்ளது. காலத்தின் வளர்ச்சிப் போக்கிலே புதிய கருவிக்கையாட்சிகள் தோன்றிவிட்ட நிலையிலே, தமிழரது பழைமையான தொழில் நுணுக்கங்களை இன்றுள்ளவர் அறிய ஏர்எழுபது வழி செய்துள்ளது. இலகு மொழிநடை யில், இனிய செய்யுள் அமைதியில் ஏர்எழுபதில் கம்பர் கூறும் செய்திகள் கருத்துக்கு நிறைவு தருபவை.

சரஸ்வதி அந்தாதி ஆய கலைகள் அறுபத்து நான் கினையும் எமக்கும் உணர்த்திய கலைமகளின் புகழ்பாடு வது. அந்தாதி நிலையாக அமைந்த பாடல்கள் அன்னை கலைவாணியின் தன்மையை விரித்துக் கூறுகின்றன. முன்னைய இலக்கியங்கள் கூறும் கலைமகளின் புகழும், அருட் கோலமும், ஆட்கொள்ளும் பாங்கும் தொகுப்பு நிலையிலே கம்பர் பாடல்களில் துலக்கம் பெற்றுள்ளன.

இன்று இப்பாடல்களைக் கற்பவர் கம்பர் கலைவாணி மேல் வைத்திருந்த பக்தியை அறிய சரஸ்வதி அந்தாதி துணை நிற்கும் என்பதில் ஐயமில்லை.

சடகோபரந்தாதி: சடகோபர் பேரும் புகழும் பாடுவது. அந்தாதி அமைப்பிலே கம்பர் அதைப் பாடியதன் மூலம் எடுத்துக்கொண்ட நோக்கத்தையும் நன்கு நிறைவேற்றி உள்ளார்.

திருக்கை வழக்கம்: நெடும்பாடல் அமைப்பிலே பல்வேறுபட்ட கைவண்ணங்களைக் காட்டுகிறது. பல்வேறு நிலைகளிலே பணிசெய்யும் கைகளை ஒருங்கே காட்டுகின்ற பாடல்திறமும், பொருள் நோக்கும் சிறப்பாயமைந்துள்ளன.

> ''நடக்கை, இருக்கை, நகைக்கை, மிடிதீர்க்கை
> கொடுக்கை, செழுங்கை, குளிர்க்கை-தொடுத்தது எல்லாம்
> சீராக உண்டாக்கும் பிசங்கைப் பெருங்கருணை
> காராளர் கற்பகப் பூங்கை''

என வரும் இறுதி நான்கடிகளும் சிந்தனைக்கு விருந்து தருவன. 'கை' என்பது விகுதி நிலையிலே பயன்படும் நிலையை விளக்கும் நடக்கை, இருக்கை நகைக்கை, மிடிர்தீகை சொற்கள் செய்யுளின் சிலேடை நயம் காட்டும். கம்பர் பாடும் கைவண்ணம் அவர் பணிவையும், பண்பையும் பறை சாற்றுகிறது.

கம்பகளஞ்சியத்திலே தொகுக்கப்பட்டுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களும், மிகைப்பாடல்களும் கம்பரது கவிநயத்தினைப் பிறிதொரு வகையிலே காண்பதற்கு உதவுகின்றன. பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம் என ஆறு காண்டங்களுக்கு முறையே பாடப்பட்டுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் யாவும்

கம்பருடைய பக்திப் பாங்கினை வெளிப்படுத்தும் சிறந்த செய்யுட்களெனலாம். தெளிவாய் உணர்ந்திருக்கும் இறை யின் ஆற்றலைச் செய்யுள்களிலே கனிவாய்ப்பாடிய கம்பர் உள்ளம் நாம் காணவேண்டுமாயின் இப்பாடல்களை ஆழ மாகப் படிக்கவேண்டும்.

''ஒன்று ஆய், இரண்டு சுடர் ஆய், ஒரு மூன்று ஆகி
பொன்றாத வேதம் ஒரு நான்கொடு ஐம்பூதம் ஆகி
அன்று ஆகி அண்டத்து அகத்து ஆகி புறத்தும் ஆகி
நின்றான் ஒருவன் அவன் நீள்கழல் நெஞ்சில் வைப்பாம்''

என்ற ஒரு செய்யுளிலே இயற்கை நெறியிலே இறை வனைக் கம்பர் காட்டும் அழகு அவரது வழிபாட்டு நெறியின் விளக்கமாகி நிற்கிறது. எந்தக் காரியத்தைச் செய்யப்போகும் போதும், எமக்கு மேலாக எம்மைத் தன் அருள் நோக்கினாலே கணமெல்லாம் காத்துநிற்கின்ற கடவுளைப் பணிந்து செய்வதே நன்று. காவியம் பாடிய கம்பர் தனது நீண்ட பாடல்பணி குறையின்றி நிறை வேற இறையைப் பணிந்து நிற்கும் பாடல்கள் எல்லோ ருக்கும் தேவையானவை.

கம்பருடைய பெரியகாவியம் நிறைவேறத் துணை நின்ற இறையை நாமும் துணையாகக் கொள்ளவேண் டும். கம்பரது ஏனைய ஆக்கங்களைத் தொகுத்து வெளி யிடும்போது இப்பாடல்களையும் இந்நூலிலே சேர்த்துள் ளமை தொகுப்பாளர் உளச்சிறப்பை உணர்த்தும். கம் பரது புகழ் பாடுவோர், கம்பர் கவிநயம் காண்போர், கம்பரை ஆய்வு செய்வோர் அனைவரும் கம்பரது இறை நெறியை அறியவேண்டும். புலமையின் புகழ்பெற கம்ப ருக்குத் துணைநின்ற பொருளை உணரவேண்டும். உலகம் போற்றும் உயர்ந்த காவியம் பாடிய கம்பர் பாடிய கடவுள் வாழ்த்துக்கள் காவியத்தை அணிசெய்வது மட்டு மன்றி காலத்தையும் கடந்து வாழும் பண்புடையன.

இறுதியாக, கம்பரது ஏனைய ஆக்கங்களைப் பற்றி நிலவும் கருத்து ஒன்று இன்று ஆய்வுப் பொருளாக உள்ளது. இந்த ஆக்கங்கள் கம்பருடையவை அல்ல என்ற கருத்தே அது. ஆனால் ஒன்று கூறத்தகுந்தது. கம்பரால் இந்த ஆக்கங்கள் பாடப்படவில்லை என்பதை திட்ட வட்டமாகத் தெளிவாக சான்று காட்டும் ஆதாரங்கள் இன்னமும் வெளிவரவில்லை. எனவே கம்பர் செய்யுள் கற்றவர், இலக்கிய நயம் புரிந்தவர் இக்கருத்தை அவர வர் அறிவுத் திறத்திற்கேற்ப முடிவு செய்வர்.

கம்பன் கழகம் செய்யும் இந்த ஆவணப்பணி தமிழர்க் கும் பயன்தந்து, தமிழையும் அழியாமல் பேண வழி செய் வது. காலத்தால் வேண்டப்படும் காத்திரமான பணியைச் செய்யும் கம்பன் கழகம் பாராட்டுக்குரியது.

பேராசிரியர் அ. சண்முகதாஸ்

*(தலைவர், தமிழ்த்துறை*
*யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்)*

# பொருளடக்கம்

முன்னுரை

வெளியீட்டுரை

அணிந்துரை

| | |
|---|---|
| கம்பராமாயண கடவுள் வாழ்த்துக்கள் | 01 |
| சரஸ்வதி அந்தாதி | 13 |
| ஆழ்வார் நூற்றந்தாதி என்கின்ற சடகோபர் அந்தாதி | 22 |
| ஏர் எழுபது | 51 |
| திருக்கை வழக்கம் | 75 |
| கம்பன் பாடியனவாக வழங்கும் தனிப்பாடல்கள் | 79 |
| பின்னிணைப்பு (திருக்கை வழக்கம்) | 98 |


○ ○ ○



# கம்பராமாயணக் கடவுள் வாழ்த்துக்கள்

இப்பகுதி, கம்பராமாயணக் கடவுள் வாழ்த்துக்களையும் தோத்திரங்கள் என்று கருதத் தக்கனவாய் அமைந்த 'விராதன் துதி', 'கருடன் துதி' என்னும் இரு பகுதிகளையும் உள்ளடக்கியது.

கடவுள் வாழ்த்துக்கள், ஆறு காண்டத்துக்கும் தனித் தனி அமைந்தவை. 'விராதன் துதி', ஆரணிய காண்டத்து விராதன் வதைப்படலத்திலும், 'கருடன் துதி' யுத்தகாண்டத்து நாகபாசப்படலத்திலும் அமைவன.

கம்பன் பேரிலான ஆக்கங்களைத் தொகுக்க முனைகையில் அவனது 'இராம காதை'யையும் சேர்த்தல் அவசியம். ஆனால் அப் பாரகாவியத்தைப் பதிப்பதென்பது இன்றைய நிலையில் எம்மால் இயலக்கூடிய ஒன்றல்ல. அதுவுமன்றி அநேக பதிப்புக்களையும் அது கண்டிருக்கிறது.

எனவே, கம்பராமாயணத்துக்கு ஓர் அடையாளமாக, தெய்வாம்சம் பொருந்திய இத்துதிகள் மாத்திரம் தொகுக்கப்படுகின்றன. இந்நூல் முழுமைக்குமுரிய கடவுள் வாழ்த்தாகவும் இவை அமையும்.

# கம்பராமாயண கடவுள் வாழ்த்துக்கள்

**பாலகாண்டம்**

உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகு இலா விளையாட்டு உடையார் - அவர்
தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே. 1

சிற்குணத்தர் தெரிவு அரு நல் நிலை
எற்கு உணர்த்த அரிது; எண்ணிய மூன்றனுள்
முற் குணத்தவரே முதலோர்; அவர்
நற்குணக் கடல் ஆடுதல் நன்றுஅரோ. 2

ஆதி, அந்தம், அரி என, யாவையும்
ஓதினார், அலகு இல்லன, உள்ளன,
வேதம் என்பன - மெய்ந் நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றிலர் - பற்று இலார். 3

**அயோத்தியா காண்டம்,**

வான்நின்று இழிந்து, வரம்பு இகந்த
மா பூதத்தின் வைப்பு எங்கும்'
ஊனும் உயிரும் உணர்வும்போல்,
உள்ளும் புறத்தும் உளன் என்ப-

---

*1: இப்பாடலை பால காண்டத்துக்கே அன்றி கம்பரா மாயாணம் முழுமைக்கும் உரிய கடவுள் வாழ்த்தாகவும் கொள்வர்; அலகு இலா - முடிவிலாத; 2: சிற்குணத்தர் - ஞானியர் முற்குணத்தர் - சாத்துவிக குணமுடையவர்;*

கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்ப, கோல் துறந்து,
கானும் கடலும் கடந்து. இமையோர்
இடுக்கண் காத்த கழல் வேந்தே. 4

ஆரணிய காண்டம்

பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா,
ஓதி ஓதி உணரும்தொறும் உணர்ச்சி உதவும்
வேதம், வேதியர், விரிஞ்சன், முதலோர் தெரிகிலா,
ஆதி தேவர்; அவர் எம் அறிவினுக்கு அறிவுஅரோ. 5

கிட்கிந்தா காண்டம்

மூன்று உரு எனக் குணம் மும்மை ஆம் முதல்,
தோன்று உரு எவையும், அம் முதலைச் சொல்லுதற்கு
ஏன்று உரு அமைந்தவும், இடையில் நின்றவும்,
சான்று உரு உணர்வினுக்கு உணர்வும், ஆயினான். 6

சுந்தர காண்டம்

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவு என, பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின்
வேறுபாடு உற்ற வீக்கம்,
கலங்குவது எவரைக் கண்டால்?
அவர், என்பர் - 'கை வில் ஏந்தி,
இலங்கையில் பொருதார் அன்றே,
மறைகளுக்கு இறுதி ஆவார்!' 7

---

7. விலங்குதல் - பஞ்ச பூதங்களும் தனித்தனியே இருக்கும் தன்மை விட்டு ஊடுருவிக் கலத்தல்; விகாரப்பாடு — இருத்தல், பிறத்தல், பருத்தல், வளர்தல், தேய்தல், அழிதல் என்னும் அறுவகை மாற்றங்கள்; வீக்கம் — கட் புலனாகத் தோன்றும் உடல், சுண்டுப் பிறப்பு;

'ஒன்றே' என்னின், ஒன்றே ஆம்;
'பல' என்று உரைக்கின், பலவே ஆம்;
'அன்றே' என்னின், அன்றே ஆம்;
'ஆமே' என்னின், ஆமே ஆம்;
'இன்றே' என்னின், இன்றே ஆம்;
'உளது' என்று உரைக்கின், உளதே ஆம்;
நன்றே, நம்பி குடி வாழ்க்கை!
நமக்கு இங்கு என்னோ பிழைப்பு? அம்மா! 8

மிகைப் பாடல்கள் *

ஒன்று ஆய், இரண்டு சுடர் ஆய்,
ஒரு மூன்றும் ஆகி,
பொன்றாத வேதம் ஒரு நான்கொடு,
ஐம் பூதம் ஆகி,
அன்று ஆகி, அண்டத்து அகத்து ஆகி,
புறத்தும் ஆகி,
நின்றான் ஒருவன்; அவன் நீள் கழல்
நெஞ்சில் வைப்பாம். 9

நீலம் ஆம் கடல் நேமி அம் தடக் கை
மாலை மால் கெட, வணங்குதும் மகிழ்ந்தே. 10

காயும் வெண் பிறை நிகர் கடு ஒடுங்கு எயிற்று
ஆயிரம் பணாமுடி அனந்தன் மீமிசை,
மேய நான்மறை தொழ, விழித்து உறங்கிய
மாயன் மா மலர் அடி வணங்கி ஏத்துவாம். 11

---

8. *நம்பி — குணநிறைவுடையவன்; இறைவன்; குடி வாழ்க்கை — நிலை; இயல்பு; நன்று-பெரிது*

**இக்காப்புச் செய்யுள்களை, சென்னைக் கம்பன் கழகப் பதிப்பு, பாலகாண்டத்தின் மிகைப் பாடல்களாகக் குறிப்பிடுகிறது.*

மாதுளங் கனியை, சோதி
வயங்கு இரு நிதியை, வாசத்
தாது உகு நறு மென் செய்ய
தாமரைத் துணை மென் போதை,
மோது பாற்கடலில் முன்நாள்,
முளைத்த நால் கரத்தில் ஏந்தும்
போது தாயாகத் தோன்றும்
பொன் அடி போற்றி செய்வாம், 12

பராவ அரு மறை பயில் பரமன், பங்கயக்
கராதலம் நிறைபயில் கருணைக் கண்ணினான்.
அரா - அணைத் துயில் துறந்து அயோத்தி மேவிய
இராகவன், மலர்அடி இறைஞ்சி ஏத்துவாம். 13

கலங்கா மதியும், கதிரோன் புரவிப்
பொலன்கா மணித் தேரும், போகா இலங்கா
புரத்தானை, வானோர் புரத்து ஏறவிட்ட
சரத்தானை, நெஞ்சே! தரி. 14

'நாராயணாய நம!' என்னும் நல் நெஞ்சர்
பார் ஆளும் பாதம் பணிந்து, ஏத்துமாறு அறியேன்;
கார் ஆரும் மேனிக் கருணாகர மூர்த்திக்கு
ஆராதனை என் அறியாமை ஒன்றுமே. 15

பராவரும் இராமன், மாதோடு
இளவல் பின் படரக் கான் போய்,
விராதனை, கரனை, மானை,
கவந்தனை, வென்றிகொண்டு,
மராமரம், வாலி மார்பு,
துளைத்து, அணை வகுத்து, பின்னர்,
இராவணன் குலமும் பொன்ற
எய்து, உடன் அயோத்தி வந்தான். 16

தருகை நீண்ட தயரதன்தான் தரும்
இரு கை வேழத்து இராகவன்தன் கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிட,
குருகை நாதன் குரை கழல் காப்பதே. 17

அஞ்சிலே ஒன்று பெற்றான்,
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக,
ஆர் உயிர் காக்க ஏகி.
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டு,
அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்,
அவன் எம்மை அளித்துக் காப்பான். 18

எவ் இடத்தும், இராமன் சரிதை ஆம்
அவ் இடத்திலும் அஞ்சலி அத்தனாய்,
பவ்வ மிக்க புகழ்த் திருப் பாற்கடல்
தெய்வ தாசனைச் சிந்தை செய்வாம்அரோ. 19

பொத்தகம், படிகமாலை,
குண்டிகை, பொருள் சேர் ஞான
வித்தகம் தரித்த செங் கை
விமலையை, அமலைதன்னை,
மொய்த்த கொந்து அளக பார
முகிழ் முலைத் தவள மேனி
மைத் தகு கருங் கண் செவ் வாய்
அணங்கினை, வணங்கல் செய்வாம். 20

தழை செவி, சிறு கண், தாழ் கைத்
தந்த சிந்துரமும், தாரை
மழை மதத் தறுகண் சித்ர
வாரண முகத்து வாழ்வை,
இழைஇடைக் கலசக் கொங்கை
இமகிரி மடந்தை ஈன்ற
குழவியைத் தொழுவன், அன்பால் —
'குறைவு அற நிறைக' என்றே. 21

எக் கணக்கும் இறந்த பெருமையன்,
பொக்கணதன், புலி அதள் ஆடையன்,
முக்கண் அத்தன், வரம் பெற்ற மூப்பனை,
அக் கணத்தின் அவன் அடி தாழ்ந்தனம். 22

### விராதன் இராமனைத் துதித்தல்

வேதங்கள் அறைகின்ற
உலகு எங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவை என்னின்
படிவங்கள் எப்படியோ?
ஓதம் கொள் கடல் அன்றி,
ஒன்றினோடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள்தொறும் உறைந்தால்,
அவை உன்னைப் பொறுக்குமோ? 1

'கடுத்த கராம் கதுவ, நிமிர்
கை எடுத்து, மெய்கலங்கி
உடுத்த திசை அனைத்தினும் சென்று
ஒலி கொள்ள, உறுதுயரால்,
''அடுத்த பெருந் தனி மூலத்து
அரும் பரமே! பரமே!'' என்று
எடுத்து ஒரு வாரணம் அழைப்ப,
நீயோ அன்று ''ஏன்?'' என்றாய்? 2

புறம்காண, அகம்காணப்
பொதுமுகத்தின் அருள்நோக்கம்
இறங்காத தாமரைக்கண்
எம் பெருமாஅன்! இயம்புதியால்;
அறம் காத்தற்கு, உனக்கு ஒருவர்
ஆரும் ஒரு துணை இன்றி,
கறங்கு ஆகும் எனத் திரிய,
நீயேயோ கடவாய்தான்? 3

துறப்பதே தொழிலாகத்
தோன்றினோர் தோன்றியக்கால்,
மறப்பரோ தம்மை அது அன்றாகில்,
மற்று அவர் போல்

---

*3: புறம்- புறத்தவர், அகம்- அகத்தவர்:*

பிறப்பரோ? எவர்க்கும் தாம்
பெற்ற பதம் பெறல் அரிதோ!
இறப்பதே, பிறப்பதே, எனும்
விளையாட்டு இனிது உகந்தோய்! 4

பனி நின்ற பெரும் பிறவிக்
கடல் கடக்கும் புணை பற்றி,
நனி நின்ற சமயத்தோர்
எல்லாரும், ''நன்று'' என்ன,
தனி நின்ற தத்துவத்தின்
தகைமூர்த்தி நீ ஆகின்,
இனி, நின்ற முதல் தேவர்
என் கொண்டு, என் செய்வாரே? 5

ஓயாத மலர் அயனே
முதல் ஆக உளர் ஆகி,
மாயாத வானவர்க்கும்,
மற்று ஒழிந்த மன்னுயிர்க்கும்,
நீ ஆதி முதல தாதை,
நெறி முறையால் ஈன்று எடுத்த
தாய் ஆவார் யாவரே?
தருமத்தின் தனி மூர்த்தி! 6

நீ ஆதி பரம்பரமும்;
நின்னவே உலகங்கள்;
ஆயாத சமயமும் நின்
அடியவே; அயல் இல்லை;
தீயாரின் ஒளித்தியால்;
வெளி நின்றால் தீங்கு உண்டோ?
வீயாத பெரு மாய
விளையாட்டும் வேண்டுமோ? 7

---

*5: பனி- அச்சம்; துன்பமுமாம்:*
*7: பரம்பரம்-மேலான இறைவன்; நின் அடியவே - உன்னைக் காரணமாகப் பற்றியவையே;*

தாய்தன்னை அறியாத
    கன்று இல்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின்
    தாய் ஆகின், ஐய!
நீ அறிதி எப் பொருளும்;
    அவை உன்னை நிலை அறியா;
மாயை இது என்கொலோ?
    —வாராதே வர வல்லாய்! 8

''பன்னல் ஆம்'' என்று உலகம்
    பலபலவும் நினையுமால்;
உன் அலால் பெருந் தெய்வம்
    உயர்ந்துளோர் ஒழுக்கு அன்றே;
அன்ன ஊர்தியை முதல் ஆம்
    அந்தணர்மாட்டு அருந்தெய்வம்
நின் அலால் இல்லாமை
    நெறிநின்றர் நினையாரோ? 9

பொரு அரிய சமயங்கள்
    புகல்கின்ற புத்தேளிர்,
இரு வினையும் உடையார்போல்,
    அருந் தவம் நின்று இயற்றுவார்;
திரு உறையும் மணி மார்ப!
    நினக்கு என்னை செயற்பால?
ஒரு வினையும் இல்லார் போல்
    உறங்குதியால் — உறங்காதாய்! 10

அரவு ஆகிச் சுமத்தியால்,
    அயில் எயிற்றின் ஏந்துதியால்,
ஒரு வாயில் விழுங்குதியால்,
    ஓர் அடியால் ஒளித்தியால் —

---

9: பன்னல் - பன்னுதல், துதித்தல்;

திரு ஆன நிலமகளை;
இஃது அறிந்தால் சீறாளோ,
மரு ஆரும் துழாய் அலங்கல்
மணி மார்பில் வைகுவாள்? 11

மெய்யைத் தான் சிறிது உணர்ந்து,
நீ விதித்த மன்னுயிர்கள்,
உய்யத்தான் ஆகாதோ?
உனக்கு என்ன குறை உண்டோ?
வையத்தார், வானத்தார்,
மழுவாளிக்கு அன்று அளித்த
ஐயத்தால், சிறிது ஐயம்
தவிர்ந்தாரும் உளர்; ஐயா! 12

அன்னம் ஆய் அரு மறைகள்
அறைந்தாய் நீ; அவை உன்னை
முன்னம் ஆர் ஓதுவித்தார்?
எல்லாரும் முடிந்தாரோ?
பின்னம் ஆய் ஒன்று ஆதல்,
பிரிந்தேயோ? பிரியாதோ?
என்ன மா மாயம் இவை?
—ஏனம் ஆய் மண் இடந்தாய்! 13

'ஒப்பு இறையும் பெறல் அரிய ஒருவா!
முன் உவந்து உறையும்
அப்பு உறையுள் துறந்து, அடியேன்
அருந் தவத்தால் அணுகுதலால்,
இப் பிறவிக் கடல் கடந்தேன்;
இனிப் பிறவேன்; இரு வினையும்,
துப்பு உறழும் நீர்த்த சுடர்த்
திருவடியால், துடைத்தாய் நீ; 14

---

12: மழுவாளி - சிவன்; ஐயம் - பிச்சை, சந்தேகம்;
13: உன்னை - உனக்கு; பின்னம் - வேறுபாடு;
14 நீர்த்த - தன்மையுடைய

### கருடன் இராமனைத் துதித்தல்

'தேவாதிதேவர் பலராலும் முந்து
திருநாமம் ஓது செயலோய்,
மூவாது எந் நாளும் உலகு ஏழொடு ஏழும்
அரசாளும் மேன்மை முதல்வா!
மேவாத இன்பம் அவை மேவி, மேவ
நெடு வீடு காட்டு அம் முடியாய்!
ஆவாய்! வருந்தி அழிவாய்கொல்! — ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 1

எழுவாய், எவர்க்கும் முதல் ஆகி, ஈறொடு
இடை ஆகி; எங்கும் உளையாய்,
வழுவாது எவர்க்கும் வரம் ஈய வல்லை;
அவரால் வரங்கள் பெறுவாய்
தொழுவாய், உணர்ச்சி தொடராத தன்மை
உருவாய் மறைந்து; துயரால்
அழுவாய் ஒருத்தன் உளைபோலும்!. — ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 2

உன் ஒக்க வைத்த இருவர்க்கும் ஒத்தி;
ஒருவர்க்கும் உண்மை உரையாய்;
முன் ஒக்க நிற்றி; உலகு ஒக்க ஒத்தி;
முடிவு ஒக்கின், என்றும் முடியாய்;
"என் ஒக்கும், இன்ன செயலோ இது?" என்னில்,
இருள் ஒக்கும் என்று விடியாய்;
அந் நொப்பமேகொல்? பிறிதேகொல்? — ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 3

வாணாள் அளித்தி, முடியாமல்; நீதி
வழுவாமல் நிற்றி; — மறையோய்!
பேணாய், உனக்கு ஓர் பொருள் வேண்டும் என்று;
பெறுவான் அருத்தி பிழையாய்.

---

*1. நெடுவீடு — பெரிய முத்தி உலகம்; அதிரேகம் — மிகுதி;*
*2. உணர்ச்சி — மெய்யுணர்வு; உருவாய் — மனித வடிவாகி;*
*3. நொப்பம் — நொய்ப்பம், (புத்தியின்) சிறுமை.*

ஊண் ஆய், உயிர்க்கும் உயிர் ஆகி நிற்றி;
உணர்வு ஆய பெண்ணின் உரு ஆய்.
ஆண் ஆகி, மற்றும் அலி ஆதி! - ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 4

''தான் அந்தம் இல்லை; பல'' என்னும். ஒன்று;
''தனி'' என்னும், ஒன்று; ''தவிரா
ஞானம் தொடர்ந்த சுடர்'' என்னும், ஒன்று;
''நயனம் தொடர்ந்த ஒளியால்,
வானம் தொடர்ந்த பதம்" என்னும், ஒன்று; மறை
நாலும் அந்தம் அறியாது
''ஆனந்தம்'' என்னும்; ''அயல்'' என்னும்! - ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 5

மீளாத வேதம், முடிவின்கண், நின்னை
மெய்யாக மெய்யின் நினையும்;
''கேளாத'' என்று, 'பிற' என்று, சொன்ன
கெடுவார்கள் சொன்ன கடவான்,
மாளாத நீதி இகழாமை நின்கண்
அபிமானம் இல்லை, வறியோர்;
ஆளாயும் வாழ்தி; அரசாள்தி! - ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 6

சொல் ஒன்று உரைத்தி; பொருள் ஆதி; தூய
மறையும் துறந்து, திரிவாய்;
வில் ஒன்று எடுத்தி; சரம் ஒன்று எடுத்தி;
மிளிர் சங்கம் அங்கை உடையாய்;
''கொல்'' என்று உரைத்தி; கொலையுண்டு நிற்றி;
கொடியாய்! உன் மாயை அறியேன்;
அல் என்று, நிற்றி; பகல் ஆதி! - ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 7

---

6: மெய்யாக - மெய்ப்பொருளாக; மெய்யின் - மெய்யுணர்வினால்,

மறந்தாயும் ஒத்தி; மறவாயும் ஒத்தி;
　　மயல், ஆரும் யானும் அறியேம்;
துறந்தாயும் ஒத்தி; துறவாயும் ஒத்தி
　　ஒரு தன்மை சொல்ல அரியாய்;
பிறந்தாயும் ஒத்தி, பிறவாயும் ஒத்தி,
　　பிறவாமல் நல்கு பெரியோய்!
அறம்தான் நிறுத்தல் அரிது ஆக! - ஆர், இவ்
　　அதிரேக மாயை அறிவார்? 8

'வினை வர்க்கம் முற்றும் உடனே படைத்தி;
　　அவை எய்தி, என்றும் விளையா,
நினைவர்க்கு. நெஞ்சின் உறு காமம் முற்றி,
　　அறியாமை நிற்றி, மனமா;
முனைவர்க்கும் ஒத்தி, அமரர்க்கும் ஒத்தி,
　　முழுமூடர் என்னும் முதலோர்
அனைவர்க்கும் ஒத்தி, அறியாமை — ஆர், இவ்
　　அதிரேக மாயை அறிவார்? 9

எறிந்தாரும், ஏறுபடுவாரும், இன்ன
　　பொருள் கண்டு இரங்குபவரும்,
செறிந்தாரின் உண்மை எனல் ஆய தன்மை
　　தெரிகின்றது, உன்னது இடையே;
பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி;
　　பிறியாது நிற்றி; பெரியோய்!
அறிந்தார் அறிந்த பொருள் ஆதி — ஆர், இவ்
　　அதிரேக மாயை அறிவார்? 10

'பேர் ஆயிரங்கள் உடையாய்; பிறந்த
　　பொருள்தோறும் நிற்றி; பிரியாய்;
தீராய்; பிரிந்து திரிவாய்; திறம்தொறு
　　அவை தேறும் என்று தெளியாய்;
கூர் ஆழி அம் கை உடையாய்; திரண்டு ஓர்
　　உரு ஆதி; கோடல் உரிபோல்,
ஆராயின், ஏதும் இலையாதி — ஆர், இவ்
　　அதிரேக மாயை அறிவார்? 11



# சரஸ்வதி அந்தாதி

சரஸ்வதி தேவியின் திருக்கண் நோக்கில் திளைத்த கம்பன் அவளுக்குச் சூட்டி மகிழ்ந்த சொல் மாலை இது. அந்தாதித் தொடையில், கட்டளைக் கலித்துறையாய் அமைந்த முப்பது செய்யுட்கள் கலை மங்கையின் புகழ் பேசுகின்றன.

கம்பனுக்கு ஒரு இக்கட்டான நிலை ஏற்பட்ட போது சரஸ்வதிதேவி தன் காற்சிலம்பைக் கொடுத்து அவனை, அவ் விக்கட்டினின்றும் நீக்கி அருளியதாகவும், அவள் அருளை வியந்த கம்பன், இந்நூலைப் பாடினான் என்றும் கூறப்படும் செவிவழிச் செய்தி. இந்நூலின் தோற்றம் பற்றிய வரலாறாகக் கொள்ளப்பட்டுவருகிறது. விபரமான செய்திகளை விநோதரச மஞ்சரி முதலானவற்றில் காண்க.

நூலுக்குரிய முப்பது செய்யுட்களோடு காப்பாக அமைந்த இரு வெண்பாக்களும் சேர, எல்லாமாக முப்பத்திரண்டு செய்யுட்கள் இப்பகுதியை அணி செய்கின்றன.

# சரஸ்வதி அந்தாதி

காப்பு

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என் அம்மை — தூய
உரு, பளிங்கு போல்வாள்; என் உள்ளத்தின் உள்ளே
இருப்பள்; இங்கு வாராது இடர். 1

படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடி கமழ் பூந்தாமரைபோல் கையும் — துடி இடையும்
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி? 2

நூல்

சீர் தந்த வெள் இதழ்ப்பூங்
கமலாசனத் தேவி; செஞ்சொல்
தார் தந்த என் மனத்
தாமரையாட்டி; சரோருகம் மேல்
பார் தந்த நாதன் இசைதந்த
ஆரணப் பங்கயத்தாள்;
வார்தந்த சோதி அம்போருகத்தாளை
வணங்குதுமே! 1

வணங்கும் சிலை நுதலும் கழைத்
தோளும் வன முலைமேல்
சுணங்கும் புதிய நிலவு எழு
மேனியும் தோட்டுடனே

---

காப்பு: படிகம்-பளிங்கு; அல்-இரவு; அனவரதம்-எப்பொழுதும்
நூல்; 1: சரோருகம்-தாமரை; பார்தந்த நாதன்-பிரமன்;
2: சிலை - வில்; நுதல் - நெற்றி; சுணங்கு - தேமல்;
உணங்கும் - வாடும்;

பிணங்கும் கருந் தடங் கண்களும்
நோக்கி, பிரமன், அன்பால்
உணங்கும் திரு முன்றிலாய்
மறை நான்கும் உரைப்பவளே! 2

உரைப்பார் உரைக்கும் கலைகள் எல்லாம்
எண்ணில் உன்னை அன்றித்
தரைப்பால் ஒருவர் தர வல்லரோ?
தண் தரள்முலை
வரைப் பால் அமுது தந்து இங்கு
எனை வாழ்வித்த மாமயிலே,
விரைப் பாசடை மலர் வெண் தாமரைப்பதி
மெல்லியலே! 3

இயல் ஆனது கொண்டு நின்
திரு நாமங்கள் ஏத்துதற்கு
முயலாமையால் தடுமாறுகின்றேன்;
இந்த மூவுலகும்
செயலால் அமைத்த கலை மகளே,
நின் திரு அருளுக்கு
அயலாய் விடாமல் அடியேனையும்
உவந்து ஆண்டு அருளே! 4

அருக்கோதயத்தினும் சந்திரோதயம் ஒத்து
அழகு எறிக்கும்
திருக்கோல நாயகி; செந்தமிழ்ப் பாவை;
திசைமுகத்தான்
இருக்கு ஓது நாதனும் தானும்
எப்போதும் இனிது இருக்கும்
மருக்கோல நாள் மலராள்;
-என்னை ஆளும் மடமயிலே. 5

---

3: வரை - மலை; விரை - நறுமணம்; பாசடை - பச்சிலை;
4: அயல்-அந்நியம் - 5: அருக்கோதயம் - சூரியோதயம்;

மயிலே, மடப்பிடியே, கொடியே
இள மான் பிணையே.
குயிலே, பசுங்கிளியே, அன்னமே,
மனக் கூர் இருட்கு ஓர்
வெயிலே, நிலவு எழு மேனி மின்னே,
இனி வேறு தவம்
பயிலேன்; மகிழ்ந்து பணிவேன்
உனது பொற் பாதங்களே. 6

பாத அம்புயத்தினிற் பணிவார்தமக்கு
பல கலையும்
வேதாந்த முத்தியும் தந்து அருள் பாரதி,
வெள் இதழ்ப் பூஞ்
சீத அம்புயத்தில் இருப்பாள் இருப்ப,
என் சிந்தை உள்ளே -
ஏதாம் புவியிற் பெறல் அரிது ஆவது
எனக்கு இனியே? 7

இனி, நான் உணர்வது எண்எண் கலையாளை;
இலகு தொண்டைக்
கனி நாணும் செவ்விதழ் வெண் நிறத்தாளை;
கமல அயன்
தனி நாயகியை; அகில அண்டமும்
பெற்ற தாயை; மணப்
பனி நாள் மலர் உறை பூவையை;
ஆரணப் பாவையையே. 8

பாவும் தொடையும் பதங்களும் சீரும்
பலவிதமா
மேவும் கலைகள் விதிப்பாள் இடம் -
விதியின் முதிய

---

6: *இருக்கோது நாதன்-பிரமன்; மரு - வாசனை;*
7: *அம்புயம் - தாமரை; பாரதி - சரசுவதி;*
8: *தொண்டைக்கனி - கொவ்வைக்கனி;*

நாவும் பகர்ந்த தொல் வேதங்கள் நான்கும்
    நறுமலர்ப்
பூவும் திருப்பதம் பூவால் அணிபவர்
    புந்தியுமே. 9

புந்தியில் கூர் இருள் நீக்கும்
    புதிய மதியம் என்கோ?
அந்தியில் தோன்றிய தீபம் என்கோ?
    நல் அரு மறையோர்
சந்தியிற் தோன்றும் தபனன் என்கோ?
    மணித் தாமம் என்கோ?
உந்தியில் தோன்றும் பிரான் புயம் தோயும்
    ஒருத்தியையே. 10

ஒருத்தியை, ஒன்றும் இலா என் மனத்தில்
    உவந்து தன்னை
இருத்தியை, வெண் கமலத்து இருப்பாளை,
    எண்எண் கலை தோய்
கருத்தியை, ஐம்புலனும் கலங்காமல்
    கருத்தை எல்லாம்
திருத்தியை யான் மறவேன்-
    திசைமுகன் தேவியையே. 11

தேவரும் தெய்வப் பெருமானும்
    நான் மறை செப்புகின்ற
மூவரும் தானவராகி உள்ளோரும்
    முனிவரரும்
யாவரும் ஏனைய எல்லா உயிரும் —
    இதழ் வெளுத்த
பூவரு மாதின் அருள் கொண்டு
    ஞானம் புரிகின்றதே. 12

---

*9: விதி-பிரமன்; 10: புந்தி - அறிவு, மனம்; தபனன் - நெருப்பு; தாமம் - மாலை; 12. தானவர்- அசுரர்;*

புரிகின்ற சிந்தையின் ஊடே புகுந்து,
    புகுந்து இருளை
அரிகின்றது, ஆய்கின்ற எல்லா அறிவின்
    அரும் பொருளைத்
தெரிகின்ற இன்பம் கனிந்து ஊறி,
    நெஞ்சம் தெளிந்து, முற்ற
விரிகின்றது — எண்எண் கலைமாது
    உணர்த்திய வேதமுமே. 13

வேதமும் வேதத்தின் அந்தமும்
    அந்தத்தின் மெய்ப்பொருளாம்
பேதமும் பேதத்தின் மார்க்கமும்
    மார்க்கப் பிணக்கு அறுக்கும்
போதமும் போத உருவாகி
    எங்கும் பொதிந்த விந்து
நாதமும் — நாத வண்டு ஆர்க்கும்
    வெண் தாமரை நாயகியே. 14

நாயகமான மலரக மாவது
    ஞான இன்பச்
சேயகமான மலரக மாவதும்
    தீவினையா
லேயக மாறி விடுமக மாவதும்
    எவ்வுயிர்க்கும்
தாயகம் ஆவதும் தாது ஆர்
    சுவேத சரோருகமே. 15

சரோருகமே — திருக் கோயிலும்,
    கைகளும், தாள் இணையும்,
உரோருகமும், திரு அல்குலும், நாபியும்,
    ஓங்கு இருள் போல்

---

15. சுவேதம்- வெண்மை

சிரோருகம் சூழ்ந்த வதனமும்,
நாட்டமும், சேயிதழும்,
ஓரோருகம் ஈர்அரை மாத்திரை ஆன
உரைமகட்கே. 16

கருந்தா மரைமலர் கண்தாமரை மலர்
காமருதாள்
அருந்தா மரைமலர், செந்தாமரை
மலர் ஆலயமாத்
தரும் தாமரைமலர், வெண்தாமரை மலர்
தா இல் எழில்
பெருந்தாமரை மணக்கும்
கலைக்கூட்டப் பிணை தனக்கே. 17

தனக்கே துணி பொருள் என்னும் தொல் வேதம்;
சதுர்முகத்தோன்
"எனக்கே சமைத்த அபிடேகம்" என்னும்;
இமையவர் தாம்,
"மனக்கேதம் மாற்றும் மருந்து" என்ப;
"சூடு மலர்" என்பன் யான்;
கனக் கேச பந்திக் கலைமங்கை
பாத கமலங்களே. 18

கமலம் தனில் இருப்பாள் விருப்போடு
அம் கரம் குவித்துக்
கமலம் கடவுளர் போற்றும் என்
பூவை கண்ணில் கருணைக்
கமலம் தனைக்கொண்டு கண்டு ஒருகால் தம்
கருத்துள் வைப்பார்
கள் மலம் கழிக்கும் கலைமங்கை,
ஆரணி, காரணியே. 19

---

16. உரோருகம் - முலை; சிரோருகம் - கூந்தல்;
17. தா - குற்றம்; 18. அபிடேகம் - கிரீடம்; கேதம் - குற்றம்
19. மலம்— மும்மலக்குற்றம்;

காரணன் பாகமும் சென்னியும்
சேர்தரு கன்னியரும்
நாரணன் ஆகம் அகலாத் திருவும்
ஓர் நால் மருப்பு
வாரணன் தேவியும் மற்று உள்ள
தெய்வ மடந்தையரும் —
ஆரணப் பாவை பணித்த
குற்றேவல் அடியவரே. 20

அடிவேதம் நாறும் சிறப்பார்ந்த
வேதம் அனைத்தினுக்கும்
முடிவே, தவள முளரி மின்னே,
முடியா இரத்தின
வடிவே, மகிழ்ந்து பணிவார் தமது
மயல் இரவின்
விடிவே, அறிந்து என்னை ஆள்வார் - தலம்தனில்
வேறு இலையே! 21

வேறு இலை என்று உன் அடியாரில் கூடி,
விளங்கு நின்பேர்
கூறிலை; யானும் குறித்து நின்றேன்;
ஐம்புலக் குறும்பாம்
ஆறலை கள்வர் மயக்காமல், நின்
மலர்த்தாள் நெறியில்
சேறிலை ஈந்து அருள் வெண்தாமரைச்
சேயிழையே! 22

சேதிக்கலாம் தர்க்க மார்க்கங்கள்;
எவ்வெவர் சிந்தையும்
சோதிக்கலாம் உறப் போதிக்கலாம்;
சொன்னதே துணிந்து

---

20. *காரணன்— சிவன்; நால்மருப்பு வாரணன்— நான்கு கொம்புகளையுடைய யானையினன், இந்திரன்;*
21. *முளரி— தாமரை; மயல்— மயக்கம்;*

சாதிக்கலாம்; மிகப் போதிக்கலாம்;
முத்திதான் எய்தலாம்;—
ஆதிக் கலாமயில் வல்லி பொன் தாளை
அடைந்தவர்க்கே. 23

அடையாள நாள்மலர் அங்கையில் ஏடும்
அணி வடமும்
உடையாளை, நுண் இடை ஒன்றும் இலாளை,
உபநிடதப்
படையாளை, எவ்வுயிரும் படைப்பாளை,
பதும நறுந்
தொடையாளை அல்லது - மற்று இனி,
ஆரைத் தொழுவதுவே? 24

தொழுவார்; வலம் வருவார்; துதிப்பார்;
தம் தொழில் மறந்து
விழுவார்; அருமறை மெய் தெரிவார்;
இன்பம் மெய் புளகித்து
அழுவார்; இனும் கண்ணில் நீர் மல்குவார்;—
என்கண் ஆவது என்னை? —
வழுவாத செஞ்சொல் கலை மங்கை பால்
அன்பு வைத்தவரே. 25

வைக்கும் பொருளும் இல்வாழ்க்கைப் பொருளும்
மற்று எப் பொருளும்
பொய்க்கும் பொருளன்றி நீடும் பொருள் அல்ல;
பூதலத்தின்
மெய்க்கும் பொருளும் அழியாப் பொருளும்
விழுப் பொருளும்
உய்க்கும் பொருளும் கலைமான் உணர்த்தும்
உரைப் பொருளே. 26

''பொருளால் இரண்டும் பெறல் ஆகும்'' என்ற
'பொருள்' பொருளோ?
மருளாத சொற்கலை வான் பொருளோ பொருள்?
வந்து, வந்தித்து

அருளாய் விளங்கும் அவர்க்கு ஒளியாய்,
அறியாதவர்க்கு
இருளாய் விளங்கும் நலம்கிளர் மேனி
இலங்கிழையே. 27

இலங்கும் திருமுகம்; மெய்யிற் புளகம் எழும்;
கண்கள் நீர்
மலங்கும்; பழுதற்ற வாக்கும் பலிக்கும்;
மனம் மிகவே
துலங்கும்; முறுவல் செயக் களிகூரும்;
சுழல் புனல் போல்
கலங்கும் பொழுது தெளியும்;
சொல்மானைக் கருதினர்க்கே. 28

கரி ஆர் அளகமும், கண்ணும், கதிர்
முலைக்கண்ணும், செய்ய
சரி ஆர் கரமும், பதமும், இதழும்.
தவள நறும்
புரி ஆர்ந்த தாமரையும், திருமேனியும்,
பூண்பனவும் —
பிரியாது என் நெஞ்சிலும் நாவிலும் நிற்கும்
பெரும் திருவே. 29

பெரும் திருவும் சய மங்கையுமாகி,
என் பேதை நெஞ்சில்
இருந்து அருளும் செஞ்சொல் வஞ்சியைப் போற்றின்,
எல்லா உயிர்க்கும்
பொருந்திய ஞானம் தரும்; இன்ப
வேதப் பொருளும் தரும்;
திருந்திய செல்வம் தரும்; அழியாப்
பெரும் சீர் தருமே. 30

---

29. அளகம்— கூந்தல்; சரி— கைவளை;
30. திரு— திருமகள்; சயமங்கை— மலைமகள்

# ஆழ்வார் நூற்றந்தாதி

என்கின்ற

# சடகோபர் அந்தாதி

சிறப்புப் பாயிரம்*

தேவிற் சிறந்த திருமாற்குத் தக்க
தெய்வக் கவிஞன்.
பாவிற் சிறந்த திருவாய் மொழி பகர்
பண்டிதனே.
நாவிற் சிறந்த தவம் மாறற்குத் தக்க
நல் நாவலவன்
பூவிற் சிறந்த ஆழ்வான்
கம்பநாட்டுப் புலமையனே. 01

ஆரணத்தின் சிரம்மீது உறை சோதியை;
அம் தமிழால்
பாரணஞ் செய்தவனை, குரு கூரனை,
பல் பலவா
நாரணனாமென ஏத்தித் தொழ
கவி நல்கு கொடைக்
காரணனை, கம்பனை நினைவாம்
உள்களிப்புறவே. 02

"நம் சடகோபனைப் பாடினையோ?"
என்று நம் பெருமான்
விஞ்சிய ஆதரத்தாற் கேட்பக்
கம்பன் விரைந்து உரைத்த

---

* இச்சிறப்புப்பாயிரம் யாராற் பாடப்பட்டது என்பது தெரியவில்லை.



# ஆழ்வார் நூற்றந்தாதி

என்கின்ற

# சடகோபர் அந்தாதி

கம்பன் இராமாயண காவியத்தை எழுதி முடித்ததும், அதனை அரங்கேற்றி ஒப்புதல் பெறுதற்காக, ஸ்ரீ ரங்கத்து அந்தணர்களை அணுகியபோது அவர்கள் பல நிபந்தனை களை விதித்தார்கள் என்றும், கம்பன் அவற்றையெல்லாம் நிறைவேற்றவே ஈற்றில், ''நம் சடகோபனைப் பாடி னையோ?'' எனக் கேட்டனர் என்றும், அதுகாரணமாகக் கம்பனாற் பாடப்பட்டதே இந்நூல் என்றும் கம்பனைப் பற்றி வழங்கும் கதைகள் தெரிவிக்கின்றன.

பாண்டி நாட்டில் தாமிரவருணி நதிக்கரையிலுள்ள திருக்குருகூரில் அவதரித்தவரும் சடகோபர், பராங்குசர், வகுளாபரணர், மாறன், நம்மாழ்வார் என்றெல்லாம் போற் றப்படுபவரும் பன்னிரு ஆழ்வார்களுள் 'அவயவி' என்று சிறப்பிக்கப்படுபவரும் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் திவ்வியப் பிரபந்தங்களை இயற்றி, 'வேதம் தமிழ் செய்தவர்' என்னும் பேர் வாய்க்கப் பெற்றவருமான திருமால் அடியாரின் புகழ் கூறும் நூறு கவிகள் அந்தாதி மாலையாகத் தொடுக் கப்பட்டுள்ளன.

இடையிடையே அக் கவிகள் சில அகத்துறையிலும் அமையக் காணலாம்.

செஞ்சொல் அந்தாதி கலித்துறை நூறும்
 தெரியும் வண்ணம்
நெஞ்சு அடியேற்கு அருள் வேதம் தமிழ் செய்த
 நின்மலனே. 03

நாதன் அரங்கன் நயந்து உரைஎன்ன,
 நற் கம்பன் உன்தன்
பாதம் பரவிய பைந் தமிழ் நூறும்
 பரிவுடனே
ஓதும்படி எனக்கு உள்ளம் தனை அருள்
 ஓதரிய
வேதம் தமிழ் செய்த மெய்ப்பொருளே,
 இது என் விண்ணப்பமே. 04

நூல்

வேதத்தின் முன் செல்க; மெய் உணர்ந்தோர்,
 விரிஞ்சன் முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின் முன் செல்க;
 குணம் கடந்த
போதக் கடல் எங்கள் தென்குருகூர்ப்
 புனிதன் கவியோர்
பாதத்தின் முன்செல்லுமே
 தொல்லை மூலப் பரஞ்சுடரே. 01

சுடர்இரண்டே பண்டு மூன்று ஆயின;
 துகள் தீர்த்து உலகத்து
இடர் இரண்டாய் வரும் பேரிருள் சீப்பன;
 எம் பிறப்பை
அடர் இரண்டாம் மலர்த்தாள் உடையான்
 குருகைக்குஅரசன்
படர் இரும் கீர்த்திப்பிரான்
 திருவாய்மொழிப் பாவொடுமே. 02

பா ஒடுக்கும்; நுண் இசை ஒடுக்கும்;
பலவும் பறையும்
நா ஒடுக்கும்; நல் அறிவு ஒடுக்கும்;
மற்று நாட்டப்பட்ட
தே ஒடுக்கும்; பரவாதச் செரு ஒடுக்கும்;
குருகூர்ப்
பூ ஒடுக்கும் அமுதத்திரு ஆயிரம்
போந்தனவே. 03

தனமாம் சிலர்க்கு; தவமாம் சிலர்க்கு;
தருமம் நிறை
கனமாம் சிலர்க்கு; அதற்கு ஆரணமாம் சிலர்க்கு;
ஆரணத்தின்
இனமாம் சிலர்க்கு; அதற்கு எல்லையுமாம்;
தொல்லை ஏர் வகுள
வனமாலை எம் பெருமான்
குருகூர் மன்னன் வாய்மொழியே 04

மொழி பலவாயின செப்பம் பிறந்தது;
முத்தி எய்தும்
வழி பல ஆயவிட்டு ஒன்றாயது;
வழுவா நரகக்
குழி பலவாயின பாழ்பட்டது;
குளிர் நீர்ப் பொருநை
சுழி பலவாய் ஒழுகும் குருகூர்
எந்தை தோன்றலினே. 05

தோன்றா உபநிடதப் பொருள்
தோன்றலுற்றார் தமக்கும்,
சான்றாம் இவை என்ற போதும்,
மற்றுஎன் பலகாலும் தம்மில்
மூன்றா யினவும் நினைந்து
ஆரணத்தின் மும்மைத் தமிழை.
ஈன்றான் குருகைப்பிரான்,
எம்பிரான் தன் இசைக் கவியே 06

கவிப்பா அமுத இசையின் கறியொடு
கண்ணன்உண்ணக்
குவிப்பான் குருகைப் பிரான்,
சடகோபன் குமரி கொண்கன்
புவிப்பாவலர் தம் பிரான்,
திருவாய் மொழி, பூசுரர் தம்
செவிப்பால் நுழைந்து புக்கு
உள்ளத்துளே நின்று தித்திக்குமே. 07

தித்திக்கும் மூலம் தெளி அமுதே உண்டு
தெய்வம் என்பார்
பத்திக்கு மூலம்; பனுவற்கு மூலம்;
பவம் அறுப்பார்
முத்திக்கு மூலம்; முளரி கை
வாள் நகை மொய்குழலார்
அத்திக்கு மூலம்; குருகைப்
பிரான் சொன்ன ஆயிரமே. 08

ஆயிரம் மா மறைக்கும் அலங்காரம்;
அருந் தமிழ்க்குப்
பாயிரம்; நாற்கவிக்குப் படிச்சந்தம்;
பனுவற்கு எல்லாம்
தாய்; இரு நால்திசைக்குத் தனித் தீபம்;
தண் அம் குருகூர்ச்
சேய் இரு மாமரபும் செவ்வியால்
செய்த செய்யுட்களே 09

செய்யோடு அருவிக் குருகைப் பிரான்,
திருமாலை நங்கள்
கையோர் கனி எனக் காட்டித் தந்தான்
கழற்கே கமலம்

---

7; கொண்கன் - தலைவன்; பூசுரர் - அந்தணர், ஆசாரியார்;
8; பவம் - பிறப்பு; முளரி - தாமரை; அத்தி - எலும்பு
9; படிச்சந்தம் - ஒப்பு, பிரதி;

பெய்யோம்; அவன் புகழ் ஏத்திப்
பிதற்றிப் பித்தாய்த் திரியோம்
ஐயோ! அறிதும் என்றே
உபகாரத்தின் ஆற்றலையே! 10

ஆற்றில் பொதிந்த மணலின் தொகை
அருமாமறைகள்
வேற்றில் பொதிந்த பொருள்கள் எல்லாம்
விழுமாக் கமலம்
சேற்றில் பொதி அவிழ்க்கும் குருகூரர்
செஞ் சொற் பதிகம்
நூற்றில் பொதிந்த பொருள் ஒரு கூறு
நுவல்கிலவே! 11

இலவே இதழ் உளவே; முல்லையுள்
இயம்பும் மொழியும்
சிலவே; அவை செழும் தேன் ஒக்குமே;
தமிழ்ச் செஞ்சொற்களால்
பலவேதமும் மொழிந்தான்
குருகூர்ப் பதுமத்து இரண்டு
சலம் வேல்களும் உளவே;
அதுகாண் என் தனி உயிரே. 12

உயிர் உருக்கும்; புக்கு உணர்வு உருக்கும்;
உடலத்தில் உள்ள
செயிர் உருக் கொண்ட நம் தீங்கு உருக்கும்;
திருடித் திருடித்
தயிர் உருக்கும் நெய்யொடு உண்டான் அடி
சடகோபன் சந்தோடு
அயிர் உருக்கும் பொருநல்
குருகூர் எந்தை அம் தமிழே. 13

---

12; அயிர் — மணல்; பொருநல் — பொருநை நதி(தாமிர பருணி)

அந்தம் இலா மறை ஆயிரத்து
ஆழ்ந்த அரும் பொருளை
செந்தமிழ் ஆகத் திருத்திலனேல்,
நிலத் தேவர்களும்;
தத்தம் விழாவும், அழகும் என் ஆம்?
தமிழ் ஆர் கவியின்
பந்தம் விழா ஒழுகும்
குருகூர் வந்த பண்ணவனே 14

பண்ணப் படுவனவும் உளவோ?
மறை என்று பல்லோர்
எண்ணப்படச் சொல் திகழச் செய்தான்
இயலோடு இசையின்
வண்ணப் படைக்குத் தனித்
தலைவேந்தன் மலர் உருத்த
சுண்ணம் படர் படப்பைக் குருகூர் வந்த
சொற் கடலே. 15

கடலைக் கலக்கி அமுது அமரர்க்கு
அளித்தான்; களித்தார்
குடலைக் கலக்கும் குளிர் சங்கினான்;
குறையா மறையின்
திடலைக் கலக்கித் திருவாய்மொழி எனும்
தேனைத் தந்தான்;
நடலைப் பிறப்பு அறுத்து
என்னையும் ஆட்கொண்ட நாயகனே, 16

நாய்போல் பிறர்கடை தோறும் நுழைந்து,
அவர் எச்சில் நச்சி.
பேய்போல் திரியும் பிறவியினேனை
பிறவி எனும்

---

*16: நடலை — துன்பம்;*
*17: நச்சி — விரும்பி;*

நோய் போம் மருந்து என்னும்
நுன் திரு வாய்மொழி நோக்குவித்து
தாய் போல் உதவிசெய்வித்தாய்க்கு
அடியேன் பண்டு என் சாதித்ததே? 17

சாதிக்குமே பரதத்துவத்தை;
சமயத் திருக்கை
சேதிக்குமே; ஒன்று சிந்திக்குமே;
அதனைத் தெரியப்
போதிக்குமே; எங்கும் ஓங்கிப் பொது நிற்கும்
மெய்யைப் பொய்யைச்
சோதிக்குமே; உங்கள் வேதம்
எம் கோன் தமிழ்ச் சொல்எனவே. 18

சொல் என்கெனோ? முழு வேதச்
சுருக்கு என்கெனோ? எவர்க்கும்
நெல் என்கெனோ? உண்ணும்
நீர் என் கெனோ? மறை நேர் நிறுக்கும்
கல் என் கெனோ? முதிர் ஞானக்
கனி என்கெனோ? புகல
வல் என் கெனோ? குருகூர்
எம்பிரான் சொன்ன மாலையையே. 19

மாலைக் குழலியும் வில்லியும்
மாறனை வாழ்த்தலர் போம்
பாலைக் கடம் பகலே கடந்து ஏகிப்
பணை மருதத்து
ஆலைக் கரும்பின் 'நரேல்' என்னும்
ஓசையை அஞ்சி அம்பொன்
சாலைக்கிளி உறங்காத்
திரு நாட்டிடம் சார்வர்களே. 20

---

*18; திருக்கு — மாறுபாடு; சேதிக்கும் — அறுக்கும்;*
*20 கடம் — வழி*

சாரல் குறிஞ்சி தழுவும் பொழில்
    தளிர் மெல் அடித்தண்
மூரல் குறிஞ்சி நகை முகம் நோக்கற்கு
    நீ முடுகும்
சூரல் குறிஞ்சி நெறி நினை தோறும்
    துணுக்கு எனுமால்
வாரல்; குருகைப் பிரான்
    திரு ஆணை மலையவனே. 21

மலை ஆரமும் கடல் ஆரமும்
    பன்மா மணிகுயின்ற
விலை ஆரமும் விரவும் திரு நாடனை
    வேலை சுட்ட
சிலை ஆர் அமுதின் அடிச்
    சடகோபனைச் சென்று இறைஞ்சும்
தலையார் எவர்? அவரே,
    எம்மை ஆளும் தபோதனரே! 22

''போந்து ஏறுக'' என்று இமையோர் புகலினும்
    பூந்தொழுவின்
வேந்து ஏறு அடர்த்தவன் வீடே பெறினும்
    எழிற் குருகூர்
நாம் தேறிய அறிவன் திருவாய் மொழி
    நாளும் நல்கும்
தீம் தேறல் உண்டு உழலும் சித்தியே
    வந்து சித்திக்குமே. 23

சித்தர்க்கும், வேதச்சிரம் தெரிந்தோர்கட்கும்,
    செய்தவர்க்கும்,
சுத்தர்க்கும், மற்றைத் துறை துறந்தோர்கட்கும்,
    தொண்டு செய்யும்

---

22 தபோதனர் — முனிவர்

பத்தர்க்கும், ஞானப் பகலர்க்குமே அன்றிப்
    பண்டு சென்ற
முத்தர்க்கும் இன் அமுதம்
    —சடகோபன் மொழித் தொகையே 24

தொகை உளவாய பனுவற்கு எல்லாம்
    துறை தோறும் தொட்டால்
பகை உளவாம்; மற்றும் பற்று உளவாம்;
    பழ நால் மறையின்
வகை உளவாகிய வாது உளவாம்;
    வந்த வந்த இடத்தே
மிகை உளவாம்; குருகூர்
    எம்பிரான் தன் விழுத்தமிழ்க்கே. 25

விழுப்பார் இனி எம்மை யார்?
    பிறவித்துயர் மெய்யுற வந்து
அழுப்பாது ஒழிமின்; அருவினைகாள்!
    உம்மை அப்புறத்தே
இழுப்பான் ஒருவன் வந்து இன்று நின்றான்;
    இள நாகு சங்கம்
கொழுப்பாய் மருதம் சுலாம்
    குருகூர் எம் குலக்கொழுந்தே. 26

கொழுந்தோடு இலையும் முகையும் எல்லாம்
    கொய்யும் கொய்மகிழ் கீழ்
விழுந்து ஓடுவதோர் சருகும் பெறாள்;
    விறல் மாறன் என்றால்
அழும்; தோள் தளரும்; மனம் உருகும்;
    குருகூர் அறையில்
எழுந்து ஓடவும் கருத்து உண்டு;
    கெட்டேன் — இவ் இளம் கொடிக்கே! 27

---

*26: விழுப்பார் - வீழ்த்துவார்; அழுப்பாது - அழுத்தாது;*
*சுலாம் - சுற்றிவரும்;*

கொடி எடுத்துக் கொண்டு நின்றேன்;
இன்க் கொடுங் கூற்றினுக்கு ஓர்
அடி எடுத்துக் கொண்டு என் பால்
வரல் ஆகும் சொல்? ஆரணத்தின்
படி எடுத்துக் கொண்ட மாறன் என்றால்
பதுமக் கரங்கள்
முடி எடுத்துக் கொண்ட அந்தணர் தாள்
என் முடி எனவே. 28

என் முடியாது எனக்கு? யாதே அரியது?
இராவணன் தன்
பொன் முடியால் கடல் தூர்த்த வில்லான்;
பொருநைத் துறைவன்
தன் முடியால் அவன் தாள் இணைக் கீழ்
எப்பொருளும் தழீஇச்
சொல் முடியால் அமுதக்கவி ஆயிரம்
சூட்டினனே. 29

கூட்டில் குருகு உறங்கும்
குருகூர் தொழுதேன்; வழுதி
நாட்டில் பிறந்தவர்க்கு ஆளும் செய்தேன்;
என்னை நல்வினையாம்
காட்டில் புகுதவிட்டு உய்யக் கொள் மாறன்
கழல் பற்றிப் போய்
வீட்டில் புகுதற்கும் உண்டே குறை
மறை மெய் எனிலே? 30

மெய்யும் மெய் ஆயது;
பொய்யும் பொய் ஆயது; வேறுபடுத்து
உய்யும் மெய் ஆய உபாயம் வந்து உற்றது;
உறுவினையைக்

30: சூடு - கதிர்க் குவியல்;

கொய்யும் மெய் வாள் வலவன்,
குருகைக்கு அரசன், புலமை
செய்யும் ஐயன் தனக்கே
தனித்தாள் அன்பு செய்த பின்னே. 31

செய்யன், கரியன் எனத்
திருமாலைத் தெரிந்து உணர
வையம் கரி அல்ல மாட்டா மறை
மதுரக் குருகூர்
ஐயன் கவி அல்ல வேல்,
பிறவிக்கடல் ஆழ்வது அல்லால்
உய்யும் வகை ஒன்றும் யான் கண்டிலேன்
இவ் உயிர்களுக்கே. 32

உயிர்த்தாரையில் புக்குறு குறும்பாம்
ஒரு முன்றனையும்
செயிர்த்தார் குருகை வந்தார்,
திருவாய் மொழி செப்பல் உற்றால்
மயிர்த் தாரைகள் பொடிக்கும்;
கண்கள் நீர் மல்கும்; மாமறையுள்
அயிர்த்தார் அயிர்த்த பொருள் வெளியாம்;
எங்கள் அந்தணர்க்கே. 33

அந்தணர்க்கோ, நல் அருந்தவர்க்கோ,
அன்றி யோகியராய்
வந்தவர்க்கோ, மறம் வாதியர்க்கோ,
மகரக் குழை சேர்
சுந்தரத் தோளனுக்கோ, அவன் தொண்டர்கட்கோ,
சுடர் தோய்
சந்தனச் சோலைக் குருகைப் பிரான்
வந்து சந்தித்ததே? 34

---

32: கரி-அத்தாட்சி; 33: செயிர்த்தார் - கோபித்தார்;
அயிர்த்தல் – சந்தேகித்தல்

சந்தியும், சந்திப்பதமும்,
அவை தம்மிலே தழைக்கும்
பந்தியும், பல் அலங்காரப் பொருளும்,
பயிலுகிற்பீர்!
வந்தியும்; வந்திப்பவரை
வணங்கும் வகை அறியீர்!
சிந்தியும், தென் குருகூர் தொழுது
ஆட் செய்யும் தேவரையே! 35

தேவரை ஏறிய மூதறிவாட்டியைச்
சீர் அழித்தீர்,
பூவரை ஏறிய கோதை உள்ளம்
புகுந்தார் எவர் என்
றே, வரை ஏறி மொழிகின்ற போது
இயம்பிற்று? இறைவர்
மூவரையோ? குருகூரரையோ?
சொல்லு முந்துறவே! 36

துறவாதவர்க்கும், துறந்தவர்க்கும்,
சொல்லவே சுரக்கும்
அற ஆ அவை இங்கோர் ஆயிரம் நிற்க,
அந்தோ சிலர் போய்,
மறவாதியர் சொன்ன, வாசகமாம்
மலட்டு ஆவைப் பற்றிக்
கறவா கிடப்பர்; அங்கு என் பெறவோ
தங்கள் கை வலிப்பே? 37

கை தலைப் பெய்து அரும் பூசலிட்டுக்
கவியால் உலகை
உய்தலைச் செய்ததும் பொய் என்றுமோ சென்று
அவ் ஊர் அறிய
வைது அலைத்து ஏசுதுமோ?—குருகூர் என்னும்
ஆறு அறியாப்
பைதலைக் கோடு உகட்டிட்டு
ஏட்டில் ஏற்றிய பண்பனையே. 38

பண்ணும் தமிழும் தவம் செய்தன;
பழ நால் மறையும்
மண்ணும் விசும்பும் தவம் செய்தன;
மகிழ் மாறன் செய்யுள்
எண்ணும் தகைமைக்கு உரிய மெய் யோகியர்
ஞானம் என்னும்
கண்ணும் மனமும் செவியும்
தவம் செய்த காலத்திலே. 39

காலத்திலே குருகூர் புக்குக் கைக்கொள்மினோ;
கடைநாள்
ஆலத்திலே துயின்றோர் கொண்ட
ஐயிரண்டாய் அமைந்த
கோலத்திலே முளைத்துக் கொழுந்து ஓடிக்
குணம் கடந்த
மூலத்திலே செல்வம் ஊட்டிய ஞானத்து
எம் மூர்த்தியையே. 40

மூர்த்தத்தினை, இம்முழு ஏழுலகும்
முழுகுகின்ற
தீர்த்தத்தினை, செய்ய வேதத்தினை,
திருமால் பெருமை
பார்த்தற்கு அருளிய பாரதத்தைப்
பணித்தானும் நின்ற
வார்த்தைக் குருகைப் பிரானும் கண்டான்
அம்மறைப் பொருளே. 41

பொருளைச் சுவை என்று போவது எங்கே?
குருகூர்ப் புனிதன்
அருளைச் சுமந்தவள் கண்ணின் கடை திறந்து
ஆறு பட்டுக்
குருளைச் சுமந்து வெளி பரந்து
ஒட்டரும் கொள்ளை வெள்ளம்
உருளைச் சுடர்மணித் தேரை,
அந்தோ வந்து உதைக்கின்றதே! 42

வந்து அடிக்கொண்டன கொங்கைகள்;
    மாறன் குருகை வஞ்சி
கொந்து அடிக் கொண்ட
    குழலும் கலையும் குலைந்து அலையப்
பந்து அடிக்கும் தொறும் நெஞ்சம்
    பறை அடிக்கின்றது, என்றால்,
செம் தடித்து அன்ன மருங்கிற்கு
    உண்டோ நிற்கும் சிக்கனவே? 43

கனவு ஆயினவும் துரியமும் ஆய்
    அவையும் கடந்து
மனவாசகங்களை வீசிய மாறனை,
    மாமறையை,
வினவாது உணர்ந்த விரகனை,
    வெவ்வினையைத் தொலைத்த
சின வாரணத்தை, குருகைக்கு அரசனைச்
    சேர்ந்தனமே. 44

சேராதன உளவோ பெருஞ் செல்வர்க்கு
    வேதம் செப்பும்
பேராயிரம் திண் பெரும் புயம்
    ஆயிரம் பெய் துளவத்
தார் ஆர் முடி ஆயிரம்
    குருகூர்ச் சடகோபன் சொன்ன
ஆரா அமுதம் கவி ஆயிரம்
    அவ் அரியினுக்கே? 45

அரிவளை, பொன் மகிழ் ஆயிழைக்கு
    ஈயும் கொல்? அந்தி வந்து
முரிவளை முத்தும் சினையும் மயங்க
    முறை செறுத்து

---

43: *தடித்து - மின்னல்; சிக்கனவு - உறுதி*

வரிவளையும் அன்னமும்
தம்மிலே வழக்கு ஆட வலம்
புரிவளை ஊடறுக்கும்
குருகூர் எம் புரவலனே. 46

புரை துடைத்து, பெரும் பொய்யும் துடைத்து,
பிறர் புகலும்
உரை துடைத்து, அங்கு உள்ள ஊசல் துடைத்து
எம் உறுபிறவித்
துரை துடைத்து, ஆட்கொண்ட தொண்டர்பிரான்
நுரை நீர்ப்பொருநை
கரை துடைக்கும் கடலே,
துடையேல்! அன்பர் காற்சுவடே. 47

சுவடு இறக்கத் தொடர் ஆசைக்களிற்றைத்
தொடர்ந்து இரண்டு
கவடு இறக் கட்டிய பாசத் தளைக்
கண் பரிந்து சங்கக்
குவடு இறக் குத்திய மாறன் பெயர்க்
கொலையானை நங்காய்
இவள் நிறத்து ஒன்றும் படர்
அந்திவானம் இருள்கின்றதே. 48

இருளாய்ப் பரந்த உலகங்களை
விளக்கும் இரவி
பொருளாய்ப் பரந்து தான்பொது நிற்றலின்
மற்று அதுபோல்
மருளாய்ப் பரந்த மயக்கம் துயக்கு அற்ற
மாறன் எம்கோன்
அருளால் சமயம் எல்லாம்
பரன் உண்டென்று அறிவுற்றதே. 49

---

*47: புரை - குற்றம்.*

அறிவே, உனைத் தொழுதேன்;
　　மற்றை ஆகம வாதியரைச்
செறிவேன் என ஒன்று சிந்தை செய்யாது
　　செய்தாரை இல்லா
நெறிவேதம் நின்ற நிலை உணர்ந்தோன்
　　குருகூர்நிலத்தைப்
பிறிவேன் எனவும் எண்ணாது,
　　என்னை வீடு பெறுத்தினையே. 50

பெறும் பாக்கியம் உள்ள போதும்
　　பிழைப்பும் உண்டே? பிறர்பால்
வெறும்பாக் கிளத்தி மெலிகின்ற என்னை
　　வினை கொடு போய்
எறும்பாக்கிய தமியேனை
　　அமரர்க்கும் ஏறவிட்டான்—
குறும்பாக்கிய முப்பகை தவிர்த்து ஆண்ட
　　குருகை மன்னே. 51

குருகூர் நகர் எம்பிரான் அடியாரொடும்
　　கூடி அன்புற்று
ஒருகூரையில் உறைவார்க்கும் உண்டே
　　எம்மை உள்ளும் சுற்றும்
இருகூர் வினையும் அறுத்து
　　இறப் பார்க்கும் இயற்கை? அவ்வூர்
அருகூர் அருகில் அயல்
　　அயலார்க்கும் அரியதன்றே! 52

அன்றாத அன்றிலையும் அன்றுவித்து,
　　என்னை அன்னையுடன்
பின்றாத வண்ணம் எல்லாம் பின்றுவித்து
　　பிறைக் கொழுந்தை
ஒன்றாத வண்ணம் உபாயம் இயற்றிய
　　ஊழ்வினையை
வென்றான் குருகைப் பிரான் மகிழே அன்றி
　　வேறு இலையே. 53

வேறே நமக்கு இவன் அன்புடை
மெய்யடியான் என்று, உள்ளம்
தேறேன் எனல்; அது தேறத்தகும்
செந் தமிழ்ப்புலவர்க்கு
ஏறே, எதிகளுக்கு இன்அமுதே,
எறிநீர்ப் பொருநை
ஆறே, தொடர்குருகூர் மறையோர் பெற்ற
ஆணிப் பொன்னே! 54

பொன்னை உரைப்பது அப்பொன்னொடு அன்றே?
புலமைக்கு ஒருவர்
உன்னை உரைத்து உரைத்தற்கு உளரோ?
உயர் நாற்கவியும்
பின்னை உரைக்கப் பெறுவதல்லால்
பெருந்தண் குருகூர்
தென்னை உரைக்கும், இயற்கும் இசைக்கும்
சிகாமணியே. 55

மணித்தார் அரசன் தன் ஓலையைத்
தூதுவன் வாய்வழியே
திணித்து, ஆசு அழியச் சிதைமின் தலையை;
எம் தீ வினையைத்
துணித்தான் குருகைப் பிரான் தமிழால்
சுருதிப் பொருளைப்
பணித்தான் பணி அன்றெனில்
கொள்ளும், கொள்ளும் எம் பாவையையே. 56

பாவைத், திருவாய் மொழிப் பழத்தை,
பசுங் கற்பகத்தின்
பூவை, பொருகடல் போதா அமுதை,
பொருள் சுரக்கும்
கோவைப் பணித்த எம் கோவை அல்லால்
என்னைக் குற்றம் கண்டு, என்
நாவைப் பறிப்பினும் நல்லர் அன்றோ?
மற்றை நாவலரே! 57

நாவல் அம் தீவில் கவிகள் எல்லாம்
சில நாள்கழியப்
பூவலம் தீவது போல்வ அல்லால்,
குருகூர்ப் புலவன்
கேவலம் தீங்கு அறுப்பான் கவிபோல்
எங்கும் போய்க் கெழுமிக்
கூவல் அம் தீம்புனலும் கொள்ளுமே
வெள்ளம் கோள் இழைத்தே. 58

இழைத்தார் ஒருவரும் இல்லா மறைகளை
இன் தமிழால்
குழைத்தார், குருகையில் கூட்டம் கொண்டார்,
குமரித்துறைவர்,
மழைத்தார், தடக்கைகளால் என்னை
வானின் வரம்பிடைநின்று
அழைத்தார்; அறிவும் தந்தார்;
அங்குபோய் அவர்க்கு ஆட்செய்வனே! 5

ஆட்செய்யலாவது எல்லாம் செய்து
அடி அடைந்தேன்; அதுஅன்றித்
தாள் செய்ய தாமரை என்தலை ஏற்றனன்;
தண் குருகூர்
நாள் செய்ய பூந்தொடை மாறன் என்றேன்;
இனி நாள் குறித்துக்
கோள் செய்ய லாவது உண்டே
என்தன் ஆருயிர் கூற்றினுக்கே? 60

கூறப்படா மறையின் பொருள் கூறிக்,
குவலயத்தோர்
மாறப்படா வினை மாற்றிய
மாறன் மகிழ் அலங்கல்

58: கூவல் - கிணறு

நாறப்படா நின்றபோது அமுதாகும்
அது அன்றி நஞ்சம்
தேறப்படாது கெட்டேன், மன்றல் நாறும்
தண் தென்றலையே. 61

தென்றலை, தோன்றும் உபநிடதத்தை,
என் தீவினையை
நின்று அலைத்து ஒன்றும் நியாய நெறியை,
நிறை குருகூர்
மன்றலை, தோன்றும் மதுரகவியை
மனத்துள் வைப்பார்
என்தலைத் தோன்று எம்பிராற்கள்
என் நாவுக்கு உரியவரே. 62

உரிக்கின்ற கோடலின் உந்து கந்தம் என
ஒன்றும் இன்றி
விரிக்கும் தொறும் வெறும் பாழாய் விடும்
பிறர் புன்கவி; மெய்
தெரிக்கின்ற கோ சடகோபன் தன்
தெய்வக் கவி, புவியில்
சுரிக்கின்ற நுண்மணல் ஊற்று ஒக்கும்
தோண்டச் சுரத்தலினே. 63

சுரக்கும் திருவும்; வறுமையும் தீரும்;
தொடக்கு விட்டுக்
கரக்கும் இருவினை; மேன்மையும் காணும்;
கயல்குதிப்பத்
திரக்கும் கழை நெடும் தாளில் தொடுத்த
செந்தேன் உடைந்து
பரக்கும் பழன வயல் குருகூர்வளம்
பாடுமினே! 64

---

64: கரக்கும் - ஒளிக்கும்; கழை - மூங்கில்;

பாடும் கறங்கும் சிறை வண்டு பாட,
    பைந்தாள் குவளைத்
தோடும் கறங்கும் குருகைப் பிரான்,
    இச் சுழல் பிறவி
ஓடும் கறங்கன்ன வாழ்க்கையை நீக்கி,
    உணர்வு உதவி,
வீடும் திறந்து தந்தானை
    எஞ்ஞான்றும் விடகிலமே. 65

விடம் அந்தகாரம் வெம்பாலில்
    பராங்குசர் மெல்லியலுக்கு
இடர்வந்ததால் என்று இரங்கிப் புணர்ந்திலர்;
    இன் உயிரை
அடவந்த காலன் கொலோ? அறியேன்!
    இவ் அந்தி வந்து
பட அந்த காரப் பெரும்புகை ஓட்டிப்
    பரக்கின்றதே. 66

பர வாது கேட்டு, இனிப் பைய நட!
    சுருதிப் பசுக்கள்
சுரவாத வற்றைச் சுரப்பித்து
    அவை சொரியும் பொருட்பால்
கரவாது உதவிய மாறன்கவி அனையாய்,
    இனி ஓர்
சரவாதம் இப்புறம் அப்புறம் காணத்
    தடம் பணையே! 67

தடம்பணைத் தண் பொருநைக் குருகூரர்
    தகை வகுள
வடம் பணைக் கொங்கையில் வைக்கின்றிலர்;
    மற்றை மாலை எல்லாம்
உடம்பு அணைக்கும் தொறும் வெந்து குமைந்து
    வெம்பாம்பு உமிழ்ந்த
விடம் பணைக் கொண்டனவே;
    பனி தோய்ந்திடு மேகங்களே! 68

மேகத்தை ஆற்றில் கண்டேன் என்று எண்ணாது,
மெய்யன் குருகூர்ப்
பாகத்தை ஆற்றும் சொல்லாளை,
கண்ணீரின் துளி பரந்த
மோகத்தை ஆற்றிக் கொண்டே,
கண்டமாற்றம் மொழிந்து, சிந்தைச்
சோகத்தை ஆற்றிக் கொண்டே
துளிதூவத் தொடங்குகவே. 69

தொடங்குகின்றார் நடம் சொல்லுகின்றேன்;
குருகூர்த் தொழா
மடங்குகின்றாள்; மண்டலம்சுற்றி
ஆடுகின்றாள்; மதங்கி
விடங்கு கண்டு ஆர் பிழைப்பார்? சவையீர்,
விரைந்து ஏகும் இந்தப்
படங்கு விண்டால் பின்னைப்
போக ஒண்ணாது உம்பதிகளுக்கே. 70

பதியம் தமிழ் என்ன, நான்மறை என்ன,
இப் பார் புரக்கும்
மதி அந்தம் இவ்ஒளி மாலைகள் என்ன,
மறைத் தமிழின்
அதி அம் தரும் கவி ஆயிரம்
செய்தளித்தான்; அமுதம்
பொதியம் தருநதி அம்குருகூர் எந்தை
பூசுரர்க்கே. 71

பூட்சி கண்டீர்! பொய்ச் சமயப் புலவர்க்கு
போக்கு வல் வாய்
வாட்சி கண்டீர்! மற்றை மாயத்து அருகர்க்கு,
மன்னுயிர்கட்கு
ஆட்சி கண்டீர்! தொண்டர்க்கு
ஆனந்த வாரி கண்டீர்! அறிவைக்
காட்சி கண்டீர் பரவும்
குருகூர் வந்த கற்பகமே. 72

கற்றும், செவியுறக் கேட்டும்,
பருகிக் களித்தும், உள்ளே
முற்றும் உகப்பெய்தும், மூழ்கிக் குடைந்தும்,
முகந்துகொடு
நிற்றும் நிலையுற நீந்துதும் யாம்;
நிதம் மாறன் எம்மை
விற்றும் விலை கொள்ளவும் உரியான்
கவி வெள்ளத்தையே. 73

வெள்ளம் பரந்தனவோ கமலத்து?
அன்றி வெண்மதி மேல்
கள்ளம் பரந்தனவோ முயல் நீக்கி?
கவிக்கு அரசன்
தெள்ளம் பரந்த வயல் குருகூர்க்
கொம்பின் செம்முகத்து, எம்
உள்ளம் பரந்தனவோ? கண்களோ?
ஒன்றும் ஓர்கிலமே! 74

ஓரும் தகைமைக்கு உரியாரும்,
ஓங்கிய ஞானியரும்,
சாரும் தனித் தலைவன்,
சடகோபன் தடம்பதிக்கே
வாரும்! உமக்கோர் உறுதி சொன்னேன்!
உம் மயக்கமெல்லாம்
தீரும்; திருக்குஅறும்; சிந்தை செவ்வே நிற்கும்;
தீங்கு அறுமே! 75

அறுவகையாய சமயமும்
ஐவகைத்தாம் புலனும்
உறுவகையால் சொன்ன
ஒட்டம் எல்லாம் ஒழிவித்து, ஒருங்கே

---

*74: ஓர்தல் - தெளிதல்; 75; திருக்கு - குற்றம்.*

பெறுவகை ஆறெனச் செய்த பிரான்
குருகூர்ப் பிறந்த
சிறுவகையார் அவரைத் தொழுதோம்;
-எம்மைத் தீண்டுகவே. 76

தீண்டித் திருவடியைப் பற்றிக் கொண்டு
சிந்தித்ததையே
வேண்டிக் கொளப் பெற்றிலேன் வினையேன்;
இவ் வெறும்பிறவி
ஆண்டில் பிறந்த அக் காலத்திலே
அன்பனாய், அணிநீர்ப்
பாண்டித் தமிழ்த் திரு நாட்டு
உருக்காட்டிய பாவகற்கே. 77

பாவகத்தால் தன்திரு அவதாரம்
பதினொன்று என்று, இப்
பூ அகத்தார் அறியாத வண்ணம்
தன்னையே புகழ்ந்து,
நா அகத்தால் கவி ஆயிரம் பாடி
நடித்து, அளித்த
கோ அகத்தார்க்கு அன்றி, என்?
-புறத்தார் செய் குற்றேவல்களே. 78

குற்றேவலும் செய்து, மெய் கண்டு, கைகொண்டு
கும்பிட்டு, அன்பு
பெற்றேன், என்போல் எவர் பேறு பெற்றார்?
பின்னையே பிறந்து
வெற்று ஏவலில் நின்ற பொய் அன்பர் தாங்களும்
மெய் உணர்ந்தார்
என்றே குருகைப்பிரான் எம்பிரான் தன்
இயல் இசைக்கே. 79

இயலைத் தொடுத்து, இன் இசையைப் புணர்த்து,
எம்மை இப் பிறவி
மயலைத் துடைத்த பிரான்
குருகூர் மதியைக் கொணர்ந்து,

முயலைத் துடைத்து, தனுவைப் பதித்து,
முத்தம் குயிற்றி,
கயலைக் கிடத்தி, கொல், சாளரத்தூடு
கதவு இட்டதே? 80

இட்டத்திலும், தம்தம் உள்ளத்திலும்
எண்ணிலும், இருப்பின்
கிட்டத்திலும், வலியாரும்,
உருகுவர் கேணியிலும்,
பட்டத்திலும், பைந்தடத்திலும்
ஓடைப் பழனத்திலும்,
குட்டத்திலும் கயல்பாய்
குருகூரர் குணங்களுக்கே. 81

குணம் வேண்டுமே! நற்குலம் வேண்டுமே!
அக்குலத்து ஒழுக்கமாம்
பிணம் வேண்டுமே! செல்வப்பேய் வேண்டுமே!
பெரும் தண் வகுள
மணம் வேண்டும்! தண் தெரியற் பெருமான்
செய்யுள் மாமணியின்
கணம் வேண்டும்! என்று அறிவாரைக் கண்டால்
சென்று கைதொழுமே. 82

தொழும்பாக்கிய வினைத் தொல்லைப்
பிறவிச் சுழியிடைநின்று
எழும்பாக்கியம் உடைத்தாக்கவும்
தென் இயலோடு இசைந்து
கெழும்பாக் கெழுமிய கீர்த்தியை
நாளும் கிளத்தி என்னாத்
தழும்பாக்கவும் வல்ல கோ சடகோபன்
தயாபரனே. 83

---

80: *தனு - வில்*

பரந்து அலைக்கும் பொருநைக் குருகூர் என்னில்,
    கண் பனிக்கும்;
கரம் தலைக் கொள்ளும்; உள்ளும் உருகும்;
    கவியால் உலகைப்
புரந்து அலைக்கும் வினை தீர்த்தான் புனை
    மகிழ் பூவும் அன்றி
மரம்தலைக் கொள்ளவும்போது நங்காய்
    உன் மகள் கருத்தே. 84

கருத்தில் கருணை வைத்து ஏகும் இதுவும்
    கலை மறையோர்
திருத்திற்று ஒரு மணம் தீரும்
    தினம் மயல் நீரின் நிறை
முருத்தின் செருந்து அயலே
    இவளோடுமுயல் கரும்பின்
குருத்தில் பிரசம் வைக்கும் குருகூர்
    சென்று கூடுமினே 85

கூட்டங்கள்தோறும் குருகைப் பிரான் குணம்
    கூறும் அன்பர்
ஈட்டங்கள் தோறும் இருக்கப் பெற்றோம்;
    இருந்து எம்முடைய
நாட்டங்கள் தோறும்
    புனல் வந்து நாலப் பெற்றோம்; இனிமேல்
வீட்டு எங்கள் தோழர்க்கென்றே
    பெரும் போகம் விளைகின்றதே. 86

விளையா தொழிய மருந்தும் உண்டே?
    எம்வினை தினையின்
கிளையாக் கிளர விளைகின்றதால்
    கிளையாம் பிறவித்

---

85: *பிரசம் - தேன்*

85: *ஈட்டம் - திருக்கூட்டம்.*

தளை ஆசு அழியத் தடுத்துத்
 தென்பாலை வழிதடுத்து
களை ஆசறத் தடுத்து ஆண்டான்
 குருகையில் காப்புனமே. 87

புனம் பாழ் படுத்து புகழ் பாழ்படுத்தது அல்லால்
 புகுந்து, என்
மனம் பாழ் படுத்தனை வாழ்தி அன்றே?
 வழுவா நரகத்து
இனம் பாழ் படுத்த பிரான் சடகோபன்
 இன்னாக் கலியின்
சினம் பாழ் படுத்த நின்றான்
 குன்று சூழ்கின்ற செந்தினையே. 88

தினை ஒன்றிய குற்றம் மற்று உணர்ந்தோர்
 மகிழின் திறத்தின்
மனை ஒன்றிய கொடியாள் துயின்றாலும்
 தன் வாய் அடங்கா
வினை ஒன்றிய அன்றிலுக்கு இடம்காட்ட
 விரிதலைய
பனை அன்றியும் உளதோ தமியேற்குப்
 பழம் பகையே? 89

பகையாய் வருகின்ற மூன்றையும்
 வேரினொடும் பறித்து
வகையாய் வருவன யாவையும் மாற்றி
 இவ்வையம் உய்யத்
தொகை ஆயிரம் கவி சொன்னோன் பெயர் சொல்ல
 சூழ் பனியின்
புகையாம் இருள் பின்னை எந்நாள்
 கழியப் புகுகின்றதே? 90

புகுகின்றது இருள்; போகின்றது வண்ணம்;
    பூவை கண்ணீர்
உகுகின்றது என்று உயிர் ஒய்கின்றதால்
    உலகு ஏழும் உய்யத்
தொகுகின்ற ஆயிரம் சொன்னோன்
    குருகைச் சொல்லால் விளங்கத்
தருகின்றனர் அல்லர் மேன்மேலும்
    காதல் தரும் அவரே. 91

தருமமும் காமமும் தாவில் அரும் பொருளும்
    தணவாக்
கருமமும் ஆகிய காரணம் கண்ட
    அக்காரணத்தில்
பெருமையும் மாயப் பிணக்கும் தவிர்ந்து
    உறுபேதம் செய்யும்
இருமையும் தீர்ந்த பிரான்
    சடகோபன் தன் இன்னருளே. 92

அருளின் சிலமகிழ் ஆயிழைக்கு ஈவர் கொல்?
    அந்தி வந்த
இருளின் பிறிது துயரும் உண்டோ?
    இயலோடு இசையின்
பொருளில் சிறந்த அலங்கார வல்லியின் போக்கில்
    உள்ளம்
தெருளின் கரும்பு ஒக்கும் ஆயிரம் பா
    பண்டு செய்தவரே. 93

அவரே அயற்கும் அரற்கும்
    அல்லா அமரர்க்கும் எல்லாம்
பவரேகை உற்று என் பணி கொள்ளுமோ?
    படர் நீரின் இட்ட
நவரேகை உட்கொள்ளச் செய்ததல்லால்
    நம்பி மாறனைப் போல்
எவரே திரு ஆயிர மோக்கமாலை
    இசைத்தவரே! 94

தவம் செய்வதும் தழல் வேள்வி முடிப்பதும்
    தம்மை ஒறுத்து
எவன் செய்யும் மெய்யன் குருகைப் பிரான்
    எம்மை இன்னம் ஒரு
பவம் செய்கை மாற்றிய பண்டிதன்
    வண்தமிழ்ப் பாவும் உண்டே!
அவம் செய்கை மாற்றச் செவி உண்டு!
    நாவு உண்டு! அறிவும் உண்டே! 95

உண்டாட்டு இயலும் திருமால்
    உருவை உயர்த்து, உலகைத்
தொண்டு ஆட்டிய வந்து தோன்றிய
    தோன்றல் உறை குருகூர்
நண்டு ஆட்டிய நங்கை நாட்டங்களால்
    இந்த நாட்டை எல்லாம்
திண்டாட்டிய கண்கள்போல்
    செய்யுமோ கயல் தீங்குகளே? 96

தீயைக் கிழித்து ஒரு திங்கட்
    கொழுந்து எனச் செய்ததல்லால்
பேயைக் கிழித்தென அன்றில் பனை
    பிளவார் உள ஆம்
நோயைக் கிழிக்கும் வகுளம் நல்கார்
    இந்த நுண் பிறவி
மாயைக் கிழியைக் கிழித்து
    எம்மை வாங்கிட வல்லவரே. 97

வல்லம் புலிமுக வாயில்
    கரும்பின் மறு பிறப்பைக்
கொல் அம் புலி ஓர் வகுளம் கொடார்
    கொடும் கோகு உகட்டி
சல்லம் பு(ல்)லியிட்டு எதிரிடப் பாய்வது
    தாய் என்று இங்கோர்
இல்லம் புலியும் உண்டு
    அம்புலி மீள எழுகின்றதே. 98

எழுதிய நாளும் வினையும் தொகுத்து
எம்மை இப்பிறவிப்
புழுதியில் நாற்று இட்டு வைப்பஅரிதால்
புகழ் மெய்ப் புலவோர்
தொழுது இயல் நாயகன் ஓதும்
கனல்துறை நீர்ப்பொருநை
வழுதி நல் நாடன் திருவாய்மொழி
எம் மனத்தனவே. 99

மனையும், பெரும் செல்வமும், மக்களும்
மற்றை வாழ்வும், தன்னை
நினையும் பதம் என நின்ற பிரான்
குருகூர் நிமலன்
புனையும் தமிழ்க் கவியால்
இருள்நீங்கிப், பொருள் விளங்கி
வினையும் திரிவு உற்றன;
குற்றம் நீங்கின வேதங்களே. 100

மன்றே புகழும் திருவழுந்தூர் வள்ளல் மாறனை முன்
சென்றே மதுர கவிப்பெருமாள் தென்தமிழ்த் தொடையில்
ஒன்றே பதிகம் உரைத்து அவன் பொன்அடி உற்றுநின்றான்
என்றே பதிகம் பதிகமதாக இசைத்தனனே.

□ ▣ □



# ஏரெழுபது

"சுழன்றும் ஏர்பின்னது உலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை"

என்ற வள்ளுவர் வாக்குக்கு அமைய உழவுத் தொழிலுக்கு உரிய கருவி கரணங்களைப் போற்றிப் புகழ்வது இந்நூல்.

நூலுக்குரிய எழுபது செய்யுள்களோடு பாயிரம் பத்தும் வாழ்த்து ஒன்றுமாக எல்லாமாக எண்பத்தொரு செய்யுள்கள் அமைந்துள.

சாதாரணரும் விளங்கிக் கொள்ளக் கூடிய இலகுதமிழில் அமைந்திருப்பது இதன் சிறப்பு.

# ஏர் எழுபது

பாயிரம்:

கணபதி

கங்கைபெறும் காராளர் கருவி
எழுபதும் உரைக்க
அங்கைபெறும் வளைத்தழும்பும்
முலைத் தழும்பும் அணிய, மலை
மங்கைபெறும் திருஉருவாய் வந்து
உறைந்தார்தமை, வலம்செய்
கங்கைபெறும் தடவிகடக்
களிற்றானைக் கழல் பணிவாம். 1

திரிமூர்த்திகள்

நிறைக்குஉரிய அந்தணர்கள்
நெறிபரவ மனு விளங்கத்
தறைக்கு உரிய காராளர்
தமது வரம்பு இனிது ஓங்க
மறைக்கு உரிய பூமனையும்,
வண்துளபத் தாமனையும்,
பிறைக்குஉரிய நெடும் சடிலப்
பெம்மானையும் பணிவாம். 2

நாமகள்

திங்களில் மும்மாரிபெயச்
செகத்தில் உயிர் செழித்து ஓங்கக்
கங்கை குலாவு அதிபர்
வயல் கரு ஈறத் தொழுகுலத்தோர்

துங்கமக மனுநீதி
    துலங்கிட வையம் படைத்த
பங்கயன் தன் நாவில் உறை
    பா மடந்தை பதம் தொழுவாம். 3

சோழமண்டலச் சிறப்பு

ஈழமண்டலம் முதல் என உலகத்து எண்ணும்
    மண்டலத்து எறிபடை வேந்தர்
தாழும் மண்டலம், செம்பியன் மரபினோர்
    தாம் எலாம் பிறந்து இனிய பல் வளத்தில்
வாழும் மண்டலம், கனகமும் மணிகளும்
    வரம்பில் காவிரி குரம்பினில் கொழிக்கும்
சோழ மண்டலம், இதற்கு இணையாம்
    எனச்சொல்லும் மண்டலம் சொல்வதற்கு இல்லையே! 4

சோழராசன் சிறப்பு

முடியுடைய மன்னவரின்
    மூ உலகும் படைத்துடைய
கொடிஉடைய மன்னவரில்
    குலவும் முதற்பெயர் உடையான்;
இடிஉடைய ஒலி கெழுநீர்
    எழுபத்து ஒன்பது நாட்டுக்
குடிஉடையான் சென்னி; பிறர்
    என்உடையார்? கூறீரே! 5

மகாநாட்டுச் சிறப்பு

மந்தரம் அனைய திண்தோள்
    மணிமுடி வளவன், சேரன்,
சுந்தர பாண்டியன் தன்
    சுடர்மணி மகுடம் சூட
அந்தணர் குலமும், எல்லா
    அறங்களும் விளங்க வந்த
இந்திரன் ஓலக்கம் போல்
    இருந்தது பெரிய நாடே! 6

### வேளாண்குடிச் சிறப்பு

ஆழித்தேவர்க்கு அடலானார்
அல்லாத் தேவர் அம்பலத்தார்
ஊழித்தேவர் தாம்கூடி
உலகம் காக்க வல்லாரோ?
வாழித்தேவர் திருமக்கள்
வையம் புரக்கும் பெருக்காளர்
மேழித்தேவர் பெருமைக்கு
வேறும் தேவர் கூறேனே! 7

### வேளாளர் சிறப்பு

தொழும்குலத்தில் பிறந்தால் என்?
சுடர் முடிமன்னவர் ஆகி
எழும்குலத்தில் பிறந்தால் என்?
இவர்க்குப்பின் வணிகர் எனும்
செழும்குலத்தில் பிறந்தால் என்?
சிறப்பு உடையர் ஆனால் என்?
உழும்குலத்தில் பிறந்தாரே
உலகு உய்யப் பிறந்தாரே! 8

அழும்குழவிக்கு அன்புஉடைய
தாயேபோல அனைத்து உயிர்க்கும்
எழும்கருணைப் பெருக்காளர்
எளியரோ யாம் புகழ?
-உழும்கொழுவில் கருவீறி
உலகம் முதலாம் கருவாகச்
செழும்கமலத்து அயன் இவரைச்
செய்து உலகம் செய்வானேல். 9

வேதியர்தம் உயர் குலமும்,
விறல்வேந்தர் பெரும் குலமும்,
நீதிவளம் படைத்து உடைய
நிதி வணிகர் தம்குலமும்,

சாதிவளம் படைத்து உடைய
    தாய் அனைய காராளர்
கோதில்குலம் தனக்கு நிகர்
    உண்டாகில் கூறீரே. 10

நூல்:

உழவுநாள் கோடற்சிறப்பு

சீர்மங்கலம் பொழியும்;
    தெண் திரைக்கடல் புடைசூழ்
பார்மங்கலம் பொழியும்;
    பல்உயிரும் செழித்து ஓங்கும்;
கார்மங்கலம் பொழியும்
    பருவத்தே காராளர்
ஏர்மங்கலம் பொழிய
    இனிது உழ நாள்கொண்டினே. 1

உழவுச்சிறப்பு

நீர்விழாக் கொள வளர்ந்த
    நிலம் எல்லாம் தம்முடைய
சீர்விழாக் கொள விளங்கும்
    திருவிழாப் பெருக்காளர்
ஏர்விழாக் கொளின் அன்றி
    எறுழ்க்கரி, தேர், மாப்படையால்
போர்விழாக் கொள மாட்டார்
    போர் வேந்தர் ஆனாரே. 2

அலப்படைச்சிறப்பு

குடைஆளும் முடிவேந்தர்
    கொலையானை, தேர், புரவி,
படைஆளும் இவைநான்கும்
    படைத்துஉடையார் ஆனால் என்?
மடைவாளை வரும் பொன்னி
    வளநாடர் தங்கள் கலப்
படைவாளைக் கொண்டு அன்றிப்
    படை அறுக்க மாட்டாரே. 3

மேழிச் சிறப்பு

வாழி நான் மறையோர்கள்
　　வளர்க்கின்ற வேள்விகளும்,
ஆழியால் உலகு அளிக்கும்
　　அடல்வேந்தர் பெரும் திருவும்,
ஊழிபேரினும் பெயரா
　　உரை உடைய பெருக்காளர்
மேழியால் விளைவது அல்லால்
　　வேறு ஒன்றால் விளையாவே. 4

ஊற்று ஆணிச் சிறப்பு

நீற்றோனும், மலரோனும்
　　நெடியோனும், என்கின்ற
தோற்றாளர் இவராலே
　　தொல் உலகம் நிலை பெறுமோ?
மாற்றாத காவேரி
　　வள நாடர் உழும் கலப்பை
ஊற்று ஆணி உளது ஆயின்,
　　உலகு நிலை குலையாதே! 5

நுகத்தடிச் சிறப்பு

உரை ஏற்ற செங்கதிரோன்
　　ஒளி நெடும் தேர்பூண்ட நுகம்
திரை ஏற்ற கடல் உலகில்
　　செறி இருளை மாற்றுவது;
விரை ஏற்ற இரு நிலத்தோர்
　　வெறுமையொடு வீழாமே
கரை ஏற்றும் நுகம் அன்றோ
　　காராளர் உழுநுகமே? 6

நுகத்துளைச் சிறப்பு

வளைத்த திரைக் கரை சூழ்ந்த
　　வையகத்தோர் எல்லார்க்கும்
துளைத்த துளை பசும் பொன்னின்
　　அணி கிடக்கும் துளைத்து அல்லால்,

திளைத்து வரும் செழும் பொன்னித்
திருநாடர் உழு நுகத்தில்
துளைத்த துளைபோல் உதவும்
துணை உளதோ? சொல்லீரே! 7

நுகத்து ஆணிச்சிறப்பு

ஓர் ஆணித் தேரினுக்கும்
உலகங்கள் அனைத்தினுக்கும்
பேர் ஆணிப் பெருக்காளர்
பெருமைக்கு நிகர் உண்டோ?
கார் ஆணிக் காவேரி
வளநாடர் உழு நுகத்தின்
சீர் ஆணிக்கு ஒப்பதொரு
சிறந்த ஆணி செப்பீரே! 8

பூட்டாங் கயிற்றுச் சிறப்பு

நாட்டுகின்ற சோதிடத்தின்
நாண் பொருத்தம், நாள் பொருத்தம்
காட்டுகின்ற கயிறு இரண்டும்
கயிறல்ல; கடற் புவியில்
திட்டு புகழ்ப் பெருக்காளர்
செழுநுகத்தோடு உழும் புகடு
பூட்டுகின்ற கயிறு இரண்டும்
புவிமகள் மங்கலக் கயிறே 9

தொடைச் சிறப்பு

தடுத்த நெடு வரையாலும்
தட வரைகள் எட்டாலும்
உடுத்த திரைக் கடலாலும்
உலகின் நிலை வலியாமோ?
எடுத்த புகழ்ப் பெருக்காளர்
எழு நுகத்தோடு இணைப் பகடு
தொடுத்த தொடை நெகிழாதேல்
உலகு தொடை நெகிழாதே! 10

கொழுச் சிறப்பு

வேத நூல் முதலாகி
விளங்குகின்ற கலை அனைத்தும்
ஓதுவார் எல்லாரும்
உழுவார்தம் தலைக் கடைக்கே!
கோதை வேள் மன்னவர் தம்
குடை வளமும் கொழு வளமே—
ஆதலால் இவர் பெருமை
யார் உரைக்க வல்லாரே? 11

கொழுஆணிச் சிறப்பு

செழு வான மழை வாரி
திங்கள் தொறும் பொழிந்தாலும்,
கெழு ஆர் நில மடந்தை
கீழ் நீர் கொண்டு எழுந்தாலும்,
வழுவாத காவேரி
வளநாடர் உழு கலப்பைக்
கொழு ஆணி கொண்டு அன்றிக்
குவலயம் சீர் நிரம்பாதே! 12

தாற்றுக்கோலின் சிறப்பு

வெங்கோபக் கலி கடந்த
வேளாளர் விளை வயலுள்
பைங்கோல முடிதிருந்த
பார்வேந்தர் முடி திருந்தும்;
பொங்கு ஓதைக் கடல் தானைப்
போர்வேந்தர் நடத்து பெரும்
செங்கோலை நடத்தும் கோல்
ஏரடிக்கும் சிறு கோலே! 13

உழவு எருதின் சிறப்பு

வான மழை பொழிந்தாலும்
வளம்படுவது எவராலே?
ஞான மறையவர் வேள்வி
நலம் பெறுவது எவராலே?

சேனை கொடு பொரு மன்னர்
செருக்களத்தில் செருக்கும் மத
யானை வலி எவராலே?
இவர் எருத்தின் வலியாலே! 14

அதன் சுவர்கறைச் சிறப்பு

கண் நுதலோன் தனது திருக்
கண்டத்தில் படிந்த கறை
விண்ணவரை அமுதூட்டி
விளங்குகின்ற கறை என்பார்;
மண்ணவரை அமுது ஊட்டி
வான் உலகம் காப்பதுவும்
எண்ணரும் சீர்ப் பெருக்காளர்
எருது சுவல் இடு கறையே. 15

பகடு பூட்டற் சிறப்பு

ஊட்டுவார் பிறர் உளரோ?
உலகுதனில் உழு பகடு
பூட்டுவார் புகழ் அன்றிப்
பிறர் புகழும் புகழாமோ?
நாட்டு வார் சயத்துவசம்
நயப்பாரை இவர்க்கு நிகர்
காட்டுவார் யார் கொல்
இந்தக் கடல் சூழ்ந்த வையகத்தே? 16

ஏர் பூட்டற் சிறப்பு

பார் பூட்டும் திசை அனைத்தும்
பகடுகளும் பரம் பூணா;
போர்பூட்டும் காமனும் தன்
பொருசிலைமேல் சரம் பூட்டான்;
கார் பூட்டும் கொடைத் தடக்கைக்
காவேரி வளநாடர்
ஏர்பூட்டின் அல்லது மற்று
இரவியும் தேர் பூட்டானே! 17

ஏர்நடத்தற் சிறப்பு

கார்நடக்கும் படிநடக்கும்
    காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் எனில், புகழ்சால்
    இயல் இசை நாடகம் நடக்கும்;
சீர்நடக்கும்; திறன் நடக்கும்;
    திரு அறத்தின் செயல் நடக்கும்;
பார்நடக்கும்; படைநடக்கும்;
    பசிநடக்க மாட்டாதே! 18

உழுநர் சிறப்பு

''உழுதுண்டு வாழ்வாரே
    வாழ்வார் மற்று எல்லாரும்
தொழுது உண்டு பின்செல்வார்''
    என்றே இத்தொல் உலகில்
எழுதுண்ட மறைஅன்றோ
    இவர்உடனே இயலும் இது!
பழுதுண்டோ கடல்சூழ்ந்த
    பாரிடத்தில் பிறந்தோர்க்கே? 19

உழவின் சிறப்பு

அலகுஇலா மறை விளங்கும்;
    அந்தணர் ஆகுதி விளங்கும்;
பல கலையாம் தொகை விளங்கும்;
    பாவலர்தம் பா விளங்கும்;
மலர்குலாம் திருவிளங்கும்;
    மழை விளங்கும்; மனு விளங்கும்;
உலகு எலாம் ஒலிவிளங்கும்;
    உழவர் உழும் உழவாலே. 20

படைச்சாலின் சிறப்பு

பழுதுசால் வகை அறியாப்
    பழமறையோர் பெருவேள்விக்கு
உழுதுசாலது கலப்பை
    உயர்வானது என்றக்கால்,

எழுதுசால் பெரும்கீர்த்தி
ஏர்ஆளும் பெருக்காளர்
உழுதசால் வழியன்றி
உலகு வழி அறியாதே! 21

மண்வெட்டிச் சிறப்பு

மட்டிருக்கும் திருமாது;
மகிழ்ந்திருக்கும் பூமாது;
முட்டிருக்கும் செயமாது;
முன் இருப்பார் முது நிலத்து
விட்டிருக்கும் கலி தொலைத்து,
வேளாளர் தடக் கையினில்
கொட்டு இருக்க, ஒருநாளும்
குறை இருக்க மாட்டாதே. 22

வரம்புகோலுதற் சிறப்பு

மெய்வரம்பாய் நிற்கின்ற
வேதநூல் நெறி வரம்பாம்
இவ்வரம்பும் அவ்வரம்பும்
இப்புவிக்கு வரம்பாமோ?
பொய்வரம்பு தவிர்த்து அருளும்
புவிமடந்தை திருமைந்தர்
செய்வரம்பு திருத்தாரேல்
திசைவரம்பு திருந்தாதே. 23

எருக்கூடைச் சிறப்பு

அடுத்து, இறக்கிப், பெருங்கூடை
அளவுபடவே எருவை
எடுத்து, இறக்கித் தலைமேலே
கொண்டவர்தாம், இடையிடையே
கொடுத்து, இறக்கி, நிலமகளைக்
கும்பிட்டு வணங்காரேல்
படுத்து இறக்கித் திரிவார் தம்
பழி மறுக்க மாட்டாரே 24

சேறு செய்தற் சிறப்பு

வெறுப்பது எல்லாம் பொய்யினையே;
வேளாளர் மெய்யாக
ஒறுப்பது எல்லாம் கலியினையே,
உள்ளத்தால்; வெள்ளத்தால்
செறுப்பது எல்லாம் புல்லினையே;
செய்யின் வளம் அறிந்து அறிந்து
மறிப்பது எல்லாம் சேற்றினையே
வளம்படுத்தல் பொருட்டாயே. 25

பரம்பு அடித்தற் சிறப்பு

வரம்பு அடிக்க மலர் பரப்பி
வயல் அடிக்க வரம்பு தொறும்
குரம்பு அடிக்க மணி சொழிக்கும்
குலப் பொன்னித் திருநாடர்
பரம்பு அடிக்க உடைந்து அளைந்த
பழனச்சேற்று உரம் அன்றி
உரம்புஅடிப்பப் பிறிது உண்டோ?
உண்டாயின் உரையீரே! 26

வித்து விளைதற் சிறப்பு

பத்தி விளைத்திடும் தெய்வம்
பணிவார்க்கும், தற்பரமாம்
முத்தி விளைத்திடும் ஞான
முதல்வருக்கும், இன் அமுதம்
வைத்து விளைத்திடுவார்க்கும்,
வல்லவர்க்கும். பெருக்காளர்
வித்து விளைத்திடில் அன்றி
வேண்டுவன விளையாவே! 27

முளையின் சிறப்பு

திறை மயங்காது அருள் விளங்கும்
செயல்மயங்காத் திறல் வேந்தர்
நிறை மயங்கா; வணிகேசர்
நிலை மயங்கா; அந்தணர் கண்

மறை மயங்காது; ஒருநாளும்
மனு மயங்காது: உலகத்தின்
முறை மயங்காது; அவர் வயலின்
முளை மயங்காத் திறத்தாலே 28

நாற்றங்காற் சிறப்பு

ஏறுவளர்த்திடும் உலகிலும்
இசை வளர்க்கும் என உரைப்பின்
ஆறு வளர்த்திடுவது சென்று
அலைகடலைத்தான் அன்றோ?
வேறு வளர்ப்பன கிடப்ப
வேளாளர் விளை வயலின்
நாறு வளர்த்திடில் அன்றி
ஞாலம் உயிர் வளராதே. 29

நாறுபறித்தற் சிறப்பு

வெறுத்துமீன், சனி புகில்என்?
வெள்ளிதெற்கே ஆயிடில்என்?
குறித்தநாள் வரம்பு அழியாக்
குலப்பொன்னித் திருநாடர்
மறித்துநாட்டிட நின்ற
வள வயலின்இடை, நாற்றைப்
பறித்துநாள் கொண்டதன்பின்
பார் பசிக்க மாட்டாதே. 30

நாற்று முடிசுமத்தற் சிறப்பு

மாணிக்கம் முதலாய
மணி அழுத்தித் தொழில் சமைத்த
ஆணிப்பொன் முடிவேந்தர்
அணிமுடியும் முடியாமோ?
பேணி பைங் கோலமுடி
பெருக்காளர் சுமவாரேல்
சேணுக்கும் திசைப்புறத்தும்
செங்கோன்மை செல்லாதே. 31

வயலில் முடி சேர்த்தற் சிறப்பு

தென்னன்முடி, சேரன்முடி,
    தேங்கு பொன்னிநாடன் முடி,
கன்னன்முடி, கடல்சூழ்ந்த
    காசினியோர் தங்கள் முடி,
இன்ன முடி அன்றியும் மற்று
    எடுத்து உரைத்த முடிகள் எல்லாம்
மன்னும் முடி வேளாளர்
    வயலின் முடி கொண்டன்றோ? 32

முடிவிளம்புதற் சிறப்பு

வெய்ய கலி வலி தொலைக்கும்
    வேளாளர் விளைவயலில்
செய்யின் முடி விளம்பாரேல்
    விளம்புவன சில உளவோ?
மைஅறும் அந்தணர் விளம்பார்
    மறை மனு மன்னவர் விளம்பார்
ஐயம் அறு புலவோரும்
    அருந்தமிழ் நூல் விளம்பாரே 33

கைப்பாங்கின் சிறப்பு

மெய்ப் பாங்கு படக் கிடந்த
    வேதநூல் கற்றால் என்?
பொய்ப் பாங்கு படப் பிறரைப்
    புகழும் நூல் கற்றால் என்?
செய்ப் பாங்கு படக் கிடந்த
    செழும் சாலி நல் நாற்றைக்
கைப் பாங்கு பகுந்து நடக்
    கற்றாரே கற்றாரே! 34

நடவுமுனைச் சிறப்பு

உலகத்தில் பகடு உழக்கும்
    ஓங்கும் முடித் திறல்வேந்தர்
அலறத் திண் பகடு உழக்கும்
    ஒருதுமவும் முனையாமோ?

உலகத்தில் பகடு உழக்கும்
உயர்குடி கொள் வேளாளர்
சிலவர் உழச் சிலவர் நடும்
அவைஅன்றோ திருமுனையே. 35

பயிர் விளைத்தற் சிறப்பு

ஏராலே சேறாக்கி
எருவாலே கருவாக்கி
நீராலே பைங்கூழை
நிலைப்பிப்பார் தமை அன்றிக்
காராலே, காவேரி
நதியாலே, காசினியில்
ஆராலே பசி தீர்வார்
அகலிடத்தில் பிறந்தோரே? 36

பயிர்முதற் சிறப்பு

அந்தணர்க்கும் வேதம் முதல்;
அரசருக்கும் வெற்றி முதல்;
முந்திய சீர் வணிகருக்கும்
முதலாயம் முதல்; உலகில்
வந்த உயிர் தமக்கு எல்லாம்
மருந்தாக வைத்த முதல்
செந்தமிழ்க்கும் முதலாய
திருவாளர் செய் முதலே. 37

பயிர்வளர்த்தற் சிறப்பு

சீர் வளரும்; மறை வளரும்;
திறல்வேந்தர் முடி வளரும்;
பேர் வளரும்; வணிகருக்குப்
பெரும் நிதியம் மிகவளரும்;
ஏர் வளரும்; திரு வளரும்;
இசை வளரும்; கடல் சூழ்ந்த
பார்வளரும்; காராளர்
பயிர் வளரும் திறத்தாலே. 38

ஏற்றத்தின் சிறப்பு

காற்றுமேல் வருகின்ற
    கார் விடினும், கடல் சுவறி,
ஆற்று நீர் அற, வெள்ளி
    அரசனும் தெற்கு ஆயிடினும்,
ஏற்றமே கொடு நாளும்
    இறைத்து, உலகம் விளைவித்துக்
காத்துமே, உயிர்வளர்த்தல்
    காராளர் தம் கடனே    39

துலைநீரின் சிறப்பு

கலை இட்ட மறைவேந்தர்
    கனல் வேள்வி வளர்ப்பதுவும்,
மலையிட்ட புயத்து அரசர்
    மணி மகுடம் சூட்டுவதும்,
தலையிட்ட வணிகர் உயத்
    தனம் ஈட்டப் படுவதுவும்
நிலையிட்ட வேளாளர்
    துலை இட்ட நீராலே    40

கரம்பு திருத்தற் சிறப்பு

மேடுவெட்டி, வளப்படுத்தி,
    மிக வரம்பு நிலை நிறுத்திக்
காடு வெட்டி, உலகநெறி
    காராளர் காத்திலரேல்,
மேடு வெட்டிக் குறும்பு அறுக்கும்
    வேல்வேந்தர் ஏற்றாலும்
காடு வெட்டி உழுது வரும்
    கலி களைய மாட்டாரே.    41

புழுதிச் சிறப்பு

எழுதொணா மறைவிளங்கும்;
    இயல் இசை நாடகம் விளங்கும்;
பழுதிலா அறம் விளங்கும்;
    பார்வேந்தர் முடி விளங்கும்;

உழுது சால் பலபோக்கி
    உழவர் உழக்கிய வெம் கால்
புழுதியால் விளையாத
    பொருள் உளவோ புகலீரே! 42

பைங்கூழ்ச் சிறப்பு

கெட்டாரைத் தாங்குதலால்,
    கேடு படாத் தொழிற் குலத்தோர்.
ஒட்டார் என்று ஒருவகையும்
    வரையாத உயர் நலத்தோர்
பட்டாங்கு பகர்ந்தோர்க்கும்
    பசி அகலப் பைங்கூழை
நட்டாரே வையம் எல்லாம்
    நலம் திகழ நட்டாரே. 48

பயிர்க்குத் தண்ணீர் பாய்ச்சுதற் சிறப்பு

கார் தாங்கும் காவேரி
    நதி தாங்கும் காராளர்
ஏர் தாங்குவார் அன்றி
    யாவரே தாங்க வல்லார்?
பார் தாங்கு மன் உயிரின்
    பசிதாங்கும் பைங்கூழின்
நீர் தாங்குவார் அலரோ
    நிலம் தாங்குகின்றாரே! 44

களை களைதற் சிறப்பு

வளைகளையும் மணிகளையும்
    மலர்களையும் வரும் பலவின்
சுளைகளையும் கொடு கரைக்கே
    சொரி பொன்னித் திருநாடர்,
விளைகளை உண் செஞ்சாலி
    வேர் ஊன்றிக் கோடு கொள்ளக்
களை களையாவிடில் வேந்தர்
    கலி களைய மாட்டாரே. 45

கருப்பிடித்தற் சிறப்பு

திருஅடையும், திறல்அடையும்,
சீர்அடையும், செறிவுஅடையும்,
உருஅடையும், உயர்வுஅடையும்,
உலகு எல்லாம் உயர்ந்து ஓங்கும்,
தருஅடையும், கொடையாளர்
தண்வயலில் செஞ்சாலி
கருஅடையில், பூதலத்தில்
கலிஅடைய மாட்டாதே. 46

ஈற்று ஏறும் சிறப்பு

ஏற்றுஏறும் அரன் சிறப்புக்கு
எழில்ஏறும் அகத்து அழல்கள்
மாற்றுஏறும் அரசர்முடி
வளர்ந்து ஏறும் வளமை மிகும்
ஊற்று ஏறும் குலப் பொன்னி
உறை நாடர் இடும்சாலி
ஈற்று ஏறும் போது கலி
ஈடேற மாட்டாதே. 47

பசுங்கதிர்ச் சிறப்பு

முதிராத பருவத்தும் முற்றிய
நற் பருவத்தும்
கதிராகி உயிர் வளர்ப்பது
இவர் வளர்க்கும் கதிர் அன்றோ?
எதிராக வருகின்ற
எரி கதிரும் குளிர் கதிரும்
கதிராகி உயிர் வளர்ப்பது
உண்டாயில் காட்டீரே. 48

நெற்குலை வளைதற் சிறப்பு

அலை வளையும்; புவிவேந்தர்
அங்கையில் தங்கிய வீரச்
சிலை வளையும்; மதன் கருப்புச்
சிலை வளையும்: கொடுங் கலியின்

தலை வளையும்; காராளர்
    தண்வயலில் செஞ்சாலிக்
குலை வளையும் பொழுதினில்,
    செங்கோல் வளைய மாட்டாதே. 49

சேவல் காத்தற் சிறப்பு

அறம் காணும்; புகழ் காணும்;
    அருமறையின் ஆகமத்தின்
திறம்காணும்; செயம் காணும்;
    திருவளர்க்கும் நிதிகாணும்;
மறம்காணும், கருங்கலியின்
    வலி தொலைத்த காராளர்
புறம்காணும் சோறு இட்டுப்
    புறங்காணப் புகுந்திடினே. 50

அரிவாளின் சிறப்பு

மாயனார் வடிவாளும்,
    மகபதி வச்சிர வாளும்,
தாய்அனார் அரிவாளின்
    தகைமை பெறும் தன்மையவேல்
தூயனார் அவர் வழியோர்
    சுடர் அரிவாட்கு இணை என்ன
வாயினால் புகலுதும் யாம்
    மன்னர் ஒரு வாளினையே. 50

அறுப்பறுத்தற் சிறப்பு

தோட்டியல் பூங்குழற் பெரிய
    பிராட்டிக்கு ஈராழிச்சொல்
பாட்டியல் சீர்பெற அளித்த
    பரமர் உவப்புற முன்னோர்
காட்டிய நெல்முளை அறுத்தார்,
    கிளைஅறுத்தார், களை அறுத்தார்,
ஊட்டி அறுத்தார் மரபோர்
    ஊட்ட அறுத்தார் உலகே.

அரிகதிர் வழங்கும் சிறப்பு

அரிவுண்ட பொற்கதிரை
நெற்கதிர் நேர் ஆதுலர்க்குப்
பரிவுண்ட பெரு வார்த்தை
புதிதுஅன்று; பழைமைத்தே!
விரிவுண்ட கடல்படியும்
மேகங்கள் மறுத்தாலும்
திரிவு உண்டோ காராளர்
செயலினுக்கு? செப்பீரே! 53

அரிசூட்டின் சிறப்பு

கோடு வரம்பிடை உலவும்
குலப்பொன்னித் திருநாடர்
நீடு பெரும் புகழ் வளரும்
நிலமடந்தை திரு மக்கள்
பீடு வரம்பிடை, வயலில்,
பிறைவாளில் கடிகின்ற
சூடு, வரம்பு ஏறாதேல்
சுருதி வரம்பு ஏறாதே. 54

களம் செய்தற் சிறப்பு

சீரான விறல்வேந்தர்
செரு விளைத்துச் செல்லுவதும்,
பேரான மனுநீதி
பிறழாது விளங்குவதும்,
நீராலே செஞ்சாலி
நிறைவித்து நெறிநடத்தும்
காராளர் விளைவயலில்
களம் பண்ணும் பொருட்டாலே. 55

படுசூட்டின் சிறப்பு

கடிசூட்டு மலர் வாளிக்
காமன் அடல் சூடுவதும்,
கொடிசூட்டு மணிமாடக்
கோபுரம் பொன் சூடுவதும்,

முடிசூட்டி வயவேந்தர்
    மூவுலகும் இறைஞ்சு புகழ்
படிசூடி இருப்பதெல்லாம்
    படுசூட்டின் வலியாலே. 56

அரிமிதிகோலின் சிறப்பு

முருட்டின் மிகு வெம் பகைவர்
    முரண்கெடுத்து இவ்உலகம் எல்லாம்
தெருட்டிநெறி செல்கின்ற
    செங்கோன்மை செலுத்தும் கோல்,
வெருட்டில் மிகும் கரும் கலியை
    வேரோடும் அகற்றும் கோல்,
சுருட்டிமிகத் தடிந்து செந்நெல்
    சூடு மிதித்திடும் கோலே. 57

போர்செய்தற் சிறப்பு

கார்ஆளும் கரி இனமும்
    பரி இனமும் கைவகுத்துப்
போர் ஆளும் முடிவேந்தர்
    போர்க்கோலம் எந்நாளும்
சீர்ஆளும் செழும் பொன்னித்
    திருநாடர் புகழ் விளங்கும்
ஏர்ஆளும் காராளர்
    இவர் செய்யும் போராலே. 58

போர்க்களம் பாடுதற் சிறப்பு

வளம் பாடும் குடை மன்னர்
    மதயானை படப்பொருத
களம் பாடும் பெரும் செல்வம்
    காசினியில் சிறந்தன்று;
தளம்பாடும் தார்அகலத்
    தாளாளர் தம்முடைய
களம் பாடும் பெரும் செல்வம்
    காசினியில் சிறந்ததே. 59

போர்க்களச் சிறப்பு

பார் வேந்தர் பெரும் செல்வம்
பழுதுபடாது ஒருநாளும்—
ஏர் வேந்தர் பெரும் செல்வம்
அழிவு படாது இருத்தலினால்;
தேர் வேந்தர் போர்க் களத்துச்
சிலர் வெல்வர்; சிலர் தோற்பர்;—
ஏர் வேந்தர் போர்க் களத்துள்
இரப்பவரும் தோலாரே. 60

போர் செய்வோர் நெல்அரிவாளரை விளித்தற் சிறப்பு

'நாவலோ நாவல்' என
நாடறிய முறையிட்ட
ஏவலோர் போர்க்களத்தில்
எதிர் நிற்பர் முத்தமிழ் தேர்
பாவலோர் இசைவல்லோர்
பற்றுடைய பதின் எண்மர்
காவலோர் எல்லாரும்
கை ஏற்கும் பொருட்டாலே. 61

போர்படுத்தற் சிறப்பு

எடுத்த போர்க்களத்து அரசர்
இணைப் பகடு சில நடத்திப்
படுத்த போர் பயந்ததனால்
பார்தாங்கி வாழ்வது எல்லாம்
எடுத்த போர் உழவரும்
இணைப்பகடு சில நடத்திப்
படுத்த போர் வையகத்தில்
விளங்குகின்ற பயனாலே. 62

நெற்பொலிச் சிறப்பு

வில் பொலியும் பெரும் கீர்த்தி
வேளாளர் விளை வயலில்
நெற்பொலி உண்டாமாகில்
நிலமகளும் பொலிவு உண்டாம்;

பொன்பொலிவு உண்டாம்; உலகம்
புகழ்ப்பொலிவு உண்டாம்; புலவோர்
சொற்பொலிவு உண்டாம்; கலியின்
துயர் பொலிய மாட்டாதே. 63

நெற் குவித்தற் சிறப்பு

தனி நிகர் ஒன்று ஒவ்வாத
தலம் வளர்க்கும் பெருக்காளர்
மன்னு பெரும் களத்தின் இடை
மாருதத்தில் தூற்றி இடும்
செந்நெல்லைப் பொலிவாலே
செம்பொன் மலை எனக் குவித்தே
அந்நெல்லின் பொலியாலே
அவனி உயிர் வளர்ப்பாரே. 64

கூடைச் சிறப்பு

ஆடை ஆபரணங்கள்
அணிந்து முடி சுமந்திடலும்,
ஓடை யானையின் எருத்தம்
உயர்ந்து உலகம் தாங்குதலும்,
பேடையோடு அனம் நீங்காப்
பெருங்கழனிப் பெருக்காளர்
கூடையானது கையில்
கொண்டு களம் புகுந்திடினே. 65

பொலிதூற்றும் கூடைச் சிறப்பு

வலி ஆற்றும் மன்னவர்க்கும்,
தேவருக்கும், மறையவர்க்கும்,
ஒலி ஆற்றும் பேர் உலகில்
உய்ய, அமுது இடும் கூடை,
கலி மாற்றி நயந்த புகழ்க்
காராளர், தம்முடைய
பொலி தூற்றும் கூடைக்குப்
போதுவதோ? புகலீரே! 66

பொலிகோலின் சிறப்பு

சீற்றம் கொள் கரும் கலியைச்
செறுக்கும் கோல்; செகதலத்துக்
கூற்றம் கொள் மநு நெறியை
உண்டாக்கி வளர்க்கும் கோல்;
ஏற்றம் கொள் வயவேந்தர்க்கு
எப் பொருளும் கொடுத்து உலகம்
போற்றும் சொல் பெருக்காளர்
பூங்கையினில் பொலி கோலே. 66

விரைக்கோட்டைச் சிறப்பு

திருத் தோட்டுப் பிரமாவால்
செனிக்கின்ற உயிர்களுக்கும்,
உருத்தோட்டும் புகழுக்கும்,
உரிமைமுறை வளர்க்கின்ற
வரைக்கோட்டுத் திணிபுயத்து
வளர்பொன்னித் திருநாடர்
விரைக்கோட்டைக் கொண்டன்றோ?
வேந்தர் இடும் கோட்டைகளே. 68

கல்லறைச் சிறப்பு

தளர்ந்த உயிர் இத்தனைக்கும்
தாளாளர் எண் திசையும்
வளர்த்த புகழ்ப் பெருக்காளர்
வழமை யார் உரைப்பாரே?
அளந்து உலகம் அனைத்தாளும்
அரசர், வேதியர், புலவர்
களந்து வைக்க வை உகுத்த
கல்லறைகள் உண்பாரேல். 69

மெய்ப்பேறு

அரியாதனத்தின் மேல்இருந்தே
அம்பொன் குடைக்கீழ் அரசு இயற்றும்
பெரியார் பக்கல் பெறும் பேறும்
பேறே அல்ல; பெருக்காளர்

சொரியா நிற்பச் சிலர் முகந்து
　　தூற்றா நிற்பச், சிலர் அளந்து
புரியா நிற்பப், பெறும் பேறுக்கு
　　அது நேர் ஒக்கப் போகாதே! 70

வாழ்த்து

பார் வாழி! நான் மறைநூல் பருணிதர் ஆகுதி வாழி!
கார்வாழி! வளவர் பிரான் காவேரி நதி வாழி!
பேர்வாழி! பெருக்காளர் பெரும் செல்வக் கிளைவாழி!
ஏர்வாழி! இசைவாழி! எழுபத்தொன்பது நாடே.





# திருக்கை வழக்கம்

ஏரெழுபது போலவே இதுவும் உழவரைச் சிறப்பித்துப் பாடப்பட்ட ஒரு நூலாகும். கலிவெண்பாயாப்பிலான நெடும் பாடலாக அமைகிறது.

இந்நூலில் தமிழகத்தில் வழங்கும் பழைய கதைகளிலுள்ள செய்திகள் பல கூறப்படுகின்றன. சில செய்திகளில் தெளிவு இல்லை.

# திருக்கை வழக்கம்

கங்கை குலம் தழைக்கக் காட்டும் பெரும் கீர்த்தி
மங்கை பிரியாமல் வாழும் கை; - திங்கள் அணி
எம்பிரான் எம்பெருமான் இந்திராதிபர்க்கு அரிய
தம்பிரானுக்கு உரைத்த சந்தனக்கை - அம்பொன்
வளைவாரி வையகமும் வானகமும் போற்ற
முளை வாரி வந்த முழுக் கை; - கிளைவாழக்
கச்சித் தலத்து அரனைக் கல்லால் எறிய மறந்து
எச்சில் தயிர்ச்சோறு எறிந்திடும் கை; - பச்சைமிகு
தேமா வடுக்கமரில் சித்தித்தென்றே கழுத்தை
ஆமாம் எனவே அரிந்திடும் கை; - வாமமறை
ஓதுபுகழ் நாயனுடன் ஊரன் புறம் என்றே
மோது தடி கொண்டு முடுக்கும் கை: - தீது அகல
அஞ்செழுத்தே ஒன்றாகி அப்பர் எனத் தோன்றி அரன்
செஞ்சரணத்தே பூசை செய்யும் கை; - வஞ்சியர்பால்
தூது அரனைத் தான் விடுத்த சுந்தரனைக் காணாமல்
பேதம் அறத் தன்வயிறு பீறும் கை; - பூதத்தின்
மிக்க புலவனுக்காய் வேசி மனைமட்டாத்
தக்க சிவிகை தனைத் தாங்கும்கை; - மைக் கடுவாய்
மூக்கில் புகை புரிந்த மூதரவின் வாய் இடத்து
நீக்கிய கை; நாக்கதனில் நீட்டும் கை; - ஆக்கமுடன்
ஏதம் அற்ற கீர்த்தியைக் கொண்டு ஏட்டகத்திலே அடிமை
சாதனம் இட்டே கொடுத்த தங்கக்கை; - மேதினியில்
சூலி முதுகில் சுடச்சுட அப்போது சமை
பால்அடிசில் தன்னைப் படைக்கும் கை; - சாலவே
நாணம் தராமல், நடுங்காமல், கூசாமல்;
பாணன் பிணத்தைப் பரிக்கும் கை; - காணவே
தண்தமிழோன் தன்மனத்தில் சந்தேகம் தீரக் கூழ்
உண்ட வயிற்றைப் பீறி ஊற்றும் கை; - கண்டளவில்
நீலி தனக்கு அஞ்சி நின்ற அணிகேசனுக்காய்

கோலி அபயம் கொடுக்கும் கை; - ஆலமெனும்
வன்னியிடை மூழ்கி வானோர் பயம் கழுவி,
கன்னி தனையே மணந்த காட்சிக் கை: - துன்னும் ஒரு
பேருலகை எல்லாம் பிழைப்பிக்கும் ஓர் கொழுவின்
கூறில் ஒருவன் கழுத்தைக் குத்தும் கை; - பார் அறிய
வீறு பெறும் பறையன் வீயாமல் ஓர் கலத்தில்
சோறு பிசைந்து உண்ட சுடர்மணிக் கை; - ஆறாத்
தொடையில் எழுசிலந்தி தோற்றுவிக்கப் பட்டின்
புடைவை கிழித்த பெருங் கை; - கடல் சூழ்ந்த
பார் பூட்டு மன்னர் பரி, கரி பூட்டக் கதிரோன்
தேர் பூட்ட ஏர் பூட்டும் செம்பொன்கை; - வீரமதன்
ஐங்கோல் தொடுக்க அணைகோல் எடுக்க உழும்
பைங் கோல் பிடிக்கும் பதுமக்கை; - இங்கிதமாம்
சீர் படைத்த பூபாலர் செங்கோல் பிடிப்பதற்குப்
பேர் படைத்த மேழி பிடிக்கும்கை; - கார்படைத்த
மிஞ்சுமதி கீர்த்தியைப்போல் மேதினி எல்லாம் தழைக்கச்
செஞ்சாலி நாற்றைத் தெளிக்கும் கை; - எஞ்சாமல்
வெள்ளைக் களை களைந்து வீறும் பயிர் தழைக்கக்
கள்ளக் களை களைந்த கற்பகக் கை; - வள்ளுறையும்
விற்போர், மதகரிப்போர், வெம்பரிப்போர், வெற்றிப்போர்,
நெற்போர், முதல்போர் நெரித்திடும் கை;-கற்பகம்போல்
மேழிக் கொடி, சிங்க வெற்றிக் கொடி, குயிலின்
வாழிக் கொடியே மருவும் கை; - நீள் உலகில்
ஆதுலர்க்குச் செம்பொன் அளிக்கும் கை; ஆகமங்கள்
வேத புராணங்கள் விரிக்கும் கை; - நீதிநெறி
மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை,
தானம். தருமம் தழைக்கும் கை; - ஆனதமிழ்
கல்லார்கள் என்னாமல், கற்றோர்கள் என்னாமல்
எல்லாரையும் காத்து ஈடேற்றும் கை; - வல்லமைசேர்
மைமாமுகில் உலகை வாழ்விக்கும் மேன்மைபோல்
கைமாறு இலாது அளித்த கற்பகக் கை - சும்மை ஆர்
ஊர் உண்ணி நீர் போல் உலகத்தவர்க்கு எல்லாம்
பேரறிவால் ஈயும் ப்ரதாபக்கை; - பாரினில்
உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
கொடுக்க இசைந்த குளிர்க்கை; - இடுக்கணினால்

மா மறையோர், மன்னர், வணிகர் முதலாகத்
தாம் அலையாமல் கொடுத்துத் தாங்கும் கை;-தேமருவு
நாவில் புகழ் கம்பநாடர்க்கு அடிமை என்றே
மாவைக் கரைத்து முன்னே வைக்கும் கை - பாவலர் தாம்
ஏர் எழுபது ஓதி அரங்கு ஏற்றும் களரியிலே
காரி விடநாகம் கடிக்கும் கை; - பார் அறிய
சங்கையிட்டுத் தள்ளாமல் தன்சோற்றை வந்தவர்க்குப்
பங்கையிட்டு இரட்சித்த பங்கயக் கை - பொங்கமொடு
செம்பொன் விளை களத்தூர் செந்நெல் விளைத்ததனை
நம்பி மறையோர்க்கு அளித்த நாணயக்கை; - அம்பொன்
விளைகதிரைப் பார்த்து விரைகால் புலத்தை
வளைய மதிலிட்டு வரும் கை; - களம் அதனில்
ஏற்க ஆதுலர்க்கு இல்லை என்னாமல் செம்பொன்
கார்க் கையினால் முக்கையிட்ட கற்பகக்கை;-தீர்க்கமதாத்
திருப்பருத்திக் குன்றில் சிவன் ஆலயங்கள்
விருப்புடனே கட்டுவித்து வீறும் கை; - திருப்புகழை.
எண்ணை, எழுத்தை, இசை இலக்கணத்தை,
வண்மை பெற உண்டாக்கும் வாகு உள கை;-பண் அமைந்த
வேதம் ஒரு நான்கினையும் மிக்க தமிழ் நாலடியால்
ஓதி உரைத்தே கருணை ஓங்கு கை; - பூதலத்தில்
பாவலன் எச்சில் படுமாங் கனியை எடுத்து
ஆவலுடன் நன்றாய் அருந்தும் கை; - காவலவன்
மண்ணில், கடலில், மலையில் பெரியதென
எண்ணி எழுதிக் கொடுத்த ஏற்றக் கை;-திண்ணமதாய்
வையகம் எங்கும் தேடி வந்த தமிழோன் புகழச்
செய்ய முடியைக் கொடுத்த செம்பொற்கை; - துய்யபுகழ்
அட்டதிக்கும் எண்கீர்த்தி ஆயிரத்து எட்டு ஆனைதனை
வெட்டிப் பரணி கொண்ட வீரக் கை; - திட்டமுடன்
பொன்னால் அமுதும் பொரிக்கறியும் தாம் கொணர்ந்து
நல் நாவலர்க்குஅளித்த நாணயக்கை; - முன்னாள்
மனக் கவலை உற்ற வணிகன் முன்னே நின்று
தனைக் கா எனக் கேட்ட தங்கக்கை; - கனக்கவே
அன்று ஈன்ற நாகு எழுபதான எருமைத்திறத்தைக்
கன்றோடு நல்கும் கடகக் கை; - வென்றி தரும்.
ஓரானை நூறாயிரம் கல நெல் ஓர் கவிக்குச்

சீராக நல்கும் தியாகக் கை; - பேர்இலைச்
சாற்றும் ஒட்டக் கூத்தன் சரசகவி சொல்லப் பால்
ஆற்று நீர் கால் கொணர்ந்த ஆண்மைக் கை; நேத்திபெற
வண்தமிழோன் தான் உதைத்த வாகுள காலுக்குப் பொன்
வெண்டயம் இட்டே வணங்கும் வெற்றிக்கை; புண்டரிகக்
கையால் புலவன் கனகமுடிமேற் குட்டச்
செய்ஆழி பண்ணி இட்ட தீரக் கை; - நொய்ய
எறும்புக்கும் ஆஸ்பதம் தான் இல்லை என்ற மட்டில்
திறம்புக்க யானைதரும் செங்கை; - பறம்புதனில்
எண்ணாயிரம் முனிவர்க்கு ஏற்றபடி அப்படியே
பண்ணாக் கொடுக்கும் பராக்கிரமக் கை; விண்நாடர்
கூத்த புகழ் அண்ட கோளம் அளவும் படர
நால் திக்கும் ஏருவினில் நாட்டும் கை; சீர்க் குகனை,
ஆதாரம் ஆனவனை, ஐங்கரனை, சங்கரனைப்
பாதாரவிந்தம் பணியும் கை, - நீதி
நடக்கை, இருக்கை, நகைக்கை, மிடிதீர்க்கை
கொடுக்கை, செழுங்கை, குளிர்க்கை; - தொடுத்தது எல்லாம்
சீராக உண்டாக்கும் செங்கைப் பெருங்கருணைக்
காராளர் கற்பகப்பூங் கை.

○ ○ ○



# கம்பன் பாடியனவாக வழங்கும் தனிப்பாடல்கள்

கம்பனால் பாடப்பட்டனவாகக் கூறப்படும் இப்பாடல் கள், தனிப்பாடல் திரட்டிலிருந்தும், தமிழ் நாவலர் சரிதை, பாவலர் சரித்திரதீபகம் ஆகிய நூல்களிலிருந்தும் திரட்டப் பட்டவை.

தன் வாழ்நாளில் பல்வேறு சந்தர்ப்பங்களின்போது கம் பன் இவற்றைப் பாடினானென அவனைப்பற்றி வழங்கும் கதைகள் புனைந்துரைக்கின்றன.

இவை அனைத்தும் கம்பனால் பாடப்பட்டவை என்ற கருத்தில் அறிஞர்பலர்க்கும் உடன்பாடில்லை; அது நியாய மானதென்றே கொள்ளவேண்டி இருக்கிறது.

# கம்பன் பாடியனவாக வழங்கும் தனிப்பாடல்கள்

**சோழநாட்டு எல்லைகள் எவை எனப்பாடியது**

கடல் கிழக்கு; தெற்கு கரைபொரு வெள்ளாறு;
குடதிசையில் கோட்டைக்கரையாம்;— வடதிசையில்
ஏண்நாட்டுப் பண்ணை; இருபத்து நாற்காதம்
சோணாட்டுக்கு எல்லை எனச் சொல். 1

**பாண்டிநாட்டு எல்லைகள் எவை எனப் பாடியது**

வெள்ளாறு அது வடக்காம்; மேற்கு, பெருவழியாம்;
தெள்ஆர் புனற்கன்னி தெற்காகும்; உள்ஆர
ஆண்டகடல் கிழக்காம்; ஐம்பத்தறு காதம்
பாண்டிநாட்டு எல்லைப் பதி. 2

**சேரநாட்டு எல்லைகள் எவை எனப் பாடியது**

வடக்குத்திசை பழனி; வான்கீழ் தென்காசி;
குடக்குத்திசை கோழிக் கோடாம்; — கடற்கரையின்
ஓரமோ தெற்காகும்; உள் எண்பதின்காதம்
சேர நாட்டு எல்லை எனச் செப்பு. 3

**தொண்டை நாட்டின் எல்லைகள் எவை எனப் பாடியது**

மேற்கு பவளமலை; வேங்கடம் நேர் வடக்குஆம்;
ஆர்க்கும் உவரீ அணி கிழக்கு; — பார்க்குள் உயர்
தெற்கு பினாகி; திகழ் இருபதின் காதம்
நல்தொண்டை நாடு எனவே நாட்டு. 4

---

4. உவரி- கடல்; பினாகி- பெண்ணைநதி.

விடம் நீங்கப் பாடியவை *

ஆழியான் பள்ளி அணையே, அவன் கடைந்த
ஆழி வரையின் மணித் தாம்பே, — பூழியான்
பூணே, புரம் எரித்த பொற்சிலையில் பூட்டுகின்ற
நாணே, அகல நட! 5

மங்கை ஒருபங்கர் மணிமார்பில் ஆரமே,
பொங்கு கடல் கடைந்த பொன்கயிறே, — திங்களையும்
சீறி அதன்மேல் ஊரும் தெய்வத் திருக் கோளே,
ஏறிய பண்பே இறங்கு! 6

பாரைச் சுமந்த பட அரவே பங்கயக் கண்
வீரன் கிடந்து உறங்கு மெல் அணையே,— ஈரமதிச்
செஞ் சடையான் பூணும் திரு ஆபரணமே,
நஞ்சு உடையாய் தூர நட! 7

'சீராமன்' என்னும் வண்ணான்
துணிவெளுத்த சிறப்பைப் பாடியது

சிரம் பார்த்தான் ஈசன்; அயன் தேவிதனைப் பார்த்தான்
கரம் பார்த்தான் செங்கமலக் கண்ணன்; — உரம் சேர்

---

5. அழியான்- திருமால்; தாம்பு- கயிறு; பூழியான்- சிவன்;
பூண்- ஆபரணம்; சிலை- வில்

* கம்பரது இராமாயணத்தை தில்லையில் வாழும் அந்தணர்கள் அங்கீகரியாதிருந்தனர். அக்காலத்தில் அவ்வந்தணர்களின் ஒருவரது குழந்தையை பாம்பு தீண்டியது; இராமாயணத்தை அங்கீகரித்தால் குழந்தையை உயிர் பெறச்செய்வதாகக் கூறினார் கம்பர். அவர்களும் இசைந்தனர். அப்போது பாடியவை.

மலை வெளுத்த திண் புயத்து வண்ணான் சிராமன்
கலை வெளுத்த நேர்த்திதனைக் கண்டு. 8

'தம்பிபுகான்' என்னும் நாவிதனைச்
சிறப்பித்துப் பாடியது

ஆர் ஆர் தலை வணங்கார்; ஆர் ஆர்தான் கை எடார்;
ஆர் ஆர் தாம் சத்திரத்தில் ஆறாதார்; — சீர் ஆரும்
தென் புலியூர் மேவும் சிவன் அருள்சேர் அம்பட்டத்
தம்பிபுகான் வாசலிலே தான். 9

கொற்கையான் மாறன் குலசேகரப் பெருமான்,
பொற்கையான் ஆன கதை போதாதோ? — நற்கமல
மன்றலே வாரி, மணிவாசலை அசைக்க,
தென்றலே, ஏன் வந்தாய்? செப்பு! 10

'காட்டில் கழுகோட்டும் கை' என்று மன்னன் கூறியதைச்
சேர்த்துப்பாடிய 'கண்ட சுத்தி'

கண்டாயோ பார்வேந்தா, கானகத்துக் கள்ளியின் கீழ்
வெண்தாழை பூத்து விளக்கு எரிய — பெண் தாலி
பூட்டுதற்கு முன்னம் ஒரு புத்திரனைப் பெற்று எடுத்தாள்
காட்டில் கழுகோட்டும் கை. 11

---

8: கலை — துணி; சிராமன் வெளுத்த துணியின் வெண்மையைக் கண்டு சிவன் தன் தலையிலிருந்த கங்கை விலகியதோ என்றும் பிரமன் சரசுவதியின் வெண்மை போயிற்றோ என்றும் திருமால் தன்கையிலிருந்த வெண்சங்கு நீங்கியதோ என்றும் பார்த்தார்கள் என்பது பாட்டின் குறிப்பு.

9. சத்திரம்- சவரக்கத்தி: மன்றல்- வாசனை.

11: கண்டசுத்தி என்பது ஒருவர் மனதில் எண்ணியதை மற்றவர் உணர்ந்து பாடுவது.

### பாண்டியன் தேவியைப் புகழ்ந்து பாடியது

உமையவளும் நீயும் ஒருங்கு ஒப்பே! ஒப்பே!
உமையவளுக்கு உண்டு அங்கு ஓர் ஊனம் - உமையவள்தன்
பாகம் தோய்ந்து ஆண்டான் பலிக்கு உழன்றான்;
[பாண்டியன் நின்
ஆகம் தோய்ந்து ஆண்டான் அரசு. 12

### சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து பாடியது

மோட்டு எருமை வாவி புக முட்டு வரால், கன்று என்று
வீட்டு அளவும் பால் சொரியும் வெண்ணெயே - நாட்டில்
அடையா நெடுங் கதவும் 'அஞ்சல்' என்ற சொல்லும்
உடையான் சடையப்பன் ஊர். 13

### தொண்டை மன்னனின் சிறப்பு

வெற்றி புனை தாதகிக்கும் பெண்ணைக்கும்
சுற்றும் பெரு நிழலாய்த் தோன்றுமே — கற்றோர்
திறம் தாங்கும்; தாங்கும் செகம் முழுதும் தாங்கும்;
அறம் தாங்கும்; தொண்டை அரசு. 14

### வல்லி எனும் தாசியை இகழ்ந்து பாடியது

கந்த மலர்ப் பிரமன் கன்னி மடவார்க்கு எல்லாம்
அந்த இளநீரை முலையாக்கினான் - சுந்தரம் சேர்
தோற்றம் மிகு வல்லிக்கு தோப்பை முலையாக்கினான்.
ஏற்றம் இதில் யார்தான் இயம்பு! 15

---

12. இப்பாடல் மங்கையர்க் கரசியாரைப்பாடியதாகவே சில நூல்களிற் குறிப்பிடப்பட்டுள்ளது.
14. தாதகி-ஆத்தி-ஆத்திமாலையைச் சூடிய சோழன்; வேம்பு-வேப்பமாலையைத் தரித்த பாண்டியன்; பெண்ணை - பனை - பனம் பூவைச் சூடிய சேரன்; தொண்டை நாட்டு அரசமரமானது ஆத்தி, வேம்பு, பனை என்பவற்றுக்குப் பெருநிழலைச் செய்யும் என்றும் தொண்டை அரசன் மூவேந்தருக்கும் தண்ணிழலாற்றுவான் என்றும் இரு பொருள் படும்.
15. தோப்பை - கோம்பை.

'மாத்தத்தன்' என்னும்
தோட்டக்காரனைப் பாடியது

இருந்தவளை, போனவளை, என்னை, அவளை
பொருந்த, வளை பறித்துப் போனான் - பெரும் தவளை
பூத்தத்த, தேன் சொரியும் பொன்னி வளநாட்டில்
மாத்தத்தன் வீதியினில் வந்து. 16

சிங்கன் என்ற கொல்லனைப் பாடியது

ஆழியான் ஆழி; அயன் எழுத்தாணி என்பார்;
கோழியான், குன்று எறிய வேல் என்பான் — பூழியான்
அங்கை மழு என்பான்; அருள்பெரிய மாவண்டூர்ச்
சிங்கன் உலைக்களத்திற் சென்று. 17

அச்சுதன் என்பவனைப் புகழ்ந்து பாடியவை

குடகர், குணகடல் என்பர்; குடகுக்கு
இடகர், வடகடல் என்பர்; — வடகடலோர்,
தென்கடல் என்பர்; திருந்து தார் அச்சுத, நின்
முன்கடை நின்று ஆர்க்கும் முரசு. 18

தினை விளைத்தார் முற்றம் தினை உணங்கும்; செந்நெல்
தனை விளைத்தார் முற்றம் அதுதானாம்; — கனையும்
முரசு உணங்க, சங்கு உணங்கும் மூரித் தேர்த்தானை
அரசு உணங்கும் அச்சுதன் முற்றம். 19

குறை உளார் எங்கு இரார்? கூர்வேல் இராம
இறை, ஆறு திங்கள் இருந்தான் — முறைமையால்
ஆலிக்கும் தார் மார்பா, அச்சுதா, அந்நாளில்
வாலிக்கு இளையான் கடை. 20

---

16. எல்லாப் பெண்களையும் வளை கழலுமாறு மெலிவித்தான் என்பது பொருள்.

17. ஆழியான்— திருமால்; ஆழி—சக்கராயுதம்; அயன்-பிரமன்; கோழியான்— கோழிக்கொடியுடைய முருகன்; மழு—கோடரி.

அரசன் அகளங்கன் அச்சுதன் முற்றத்து
அரசர் அவதரித்த அந்நாள் — முரசு அதிர
கொட்டிவிடும் ஓசையினும், கோவேந்தர் கால்தளையை
வெட்டிவிடும் ஓசை மிகும். 21

பவனி கண்ட பெண்ணின் கூற்று

தளை அவிழ் நாள்மாலைத் தாயரே, ஆவி
களையினும் என் கண்திறந்து காட்டேன் — வளை
[கொடுபோம்
வன்கண்ணன் மாவிசயன் மால்யானை தன்னொடும் வந்து
என்கண் புகுந்தான் இனி 22

'வாணன்' என்பவனின் வீரத்தைப் பாடியது

வாள்தானைத் தென்னவர்கோன், மாகதற்குத்
[தோற்ற செய்தி
கேட்டான்; அத்தீங்குரலும் கேட்டதற்பின் — நாட்டம்
பொருந்து ஆயிரவிழியான் பொன்முடியைச் சாய்த்து அங்கு
இருந்தான், இங்கு என் ஆகும் என்று. 23

திருவிடை மருதூர்க் கணிகையரைச்
சிறப்பித்துப் பாடியது

வாச மலர்மடந்தை போல்வார் — மருத வனத்து
ஈசன் அடியார் எழுபதின்மர் — நேசத்து
இரவலர்மேல் நீட்டுவர் கை; ஈண்டு உலகை ஆளும்
புரவலர்மேல் நீட்டுவர் பொன் தாள். 24

காதல்வயப்பட்டாள் ஒருத்திக்காக
அவள் தலைவனை வேண்டுவதாக அமைந்தது

மா உறங்கின; புள் உறங்கின; வண்டு உறங்கின; தண்தலைக்
கா உறங்கின; எங்கள் மான் இருகண் உறங்கிலள்; ஐயகோ!

கோ உறங்கு கடைத்தலைக் குலதீப, வள்ளை குதட்டி வாய்
ஆ உறங்கு புகார் அசஞ்சல,'அஞ்சல்' என்ன அடுக்குமே.25

நில்லாத பல்லும் பறிபட்ட கூந்தலும் நீண்ட கரிப்
பொல்லா அழுக்குப் புடவையுமாய், வெகு பூச்சியம் போய்,
செல்லாப் பணத்துக்குத் தேட்டு, ஊணுமற்று, தியங்கி, [ஒன்றும்
இல்லாத பாவிதனக்கு ஆர் துணை? பொன் இராட்டினமே!

சோழமன்னன் எதிர்கொண்டு மரியாதை செய்தபோது
அவனைப் புகழ்ந்து பாடியவை

படு பருந்தும் சூர்ப்பேயும் பல்மிருகம், செந்நாய்,
கொடி கழுகும் இத்தனையும் கூடி - வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போம் ஆறு
போம் ஆறு போம் அறு போம். 27

அன்றையிலும் வையம் அசுன்றதோ? அல்ல என்று
குன்று எடுத்து நீ திருத்திக் கொண்டாயோ? - என்றும்
அடைந்தாரைக் காக்கும் அகளங்கா, துங்கா,
நடந்தாயே நாலாறு அடி. 28

ஆறைநகரிலிருந்து ஆண்ட
'வாணன்' என்பானைப் புகழ்ந்து பாடியவை

பேரரசர் தேவிமார், பெற்ற மதலையர்தம்
மார்பகலம் கண்டு மகிழ்வரே — போர்புரிய
வல்லான் அகளங்கன் வாணன் திருநாமம்
எல்லாம் எழுதலாம் என்று. 29

---

25. *குதட்டி — அசைபோட்டு; அசஞ்சல — கவலைஅற்ற வனே; பூச்சியம்போய்— மதிப்பிழந்து.*
26: *இப்பாடலுக்கான குறிப்பில் தெளிவில்லை*
28. *அகளங்கா—களங்கமில்லாதவனே; துங்கா — சிறப் புடையவனே; வேழம்— யானை*

உலைக்கு உரிய பண்டம் உவந்து இரக்கச் சென்றால்
கொலைக்கு உரிய வேழம் கொடுத்தான்;—தலைக்கு உரிய
வாணர்கோன், ஆறை மகதேவனுக்கு இந்தப்
பாணனோடு என்ன பகை? 30

வாணன் பெயர்எழுதா மார்பு உண்டோ? மாகதர்கோன்
வாணன் புகழ்உரையா வாய் உண்டோ? - வாணன்
கொடி தாங்கி நில்லாத கொம்பு உண்டோ? உண்டோ
அடி தாங்கி நில்லா அரசு? 31

பாண்டியனைப் பேர் மாற்றி, பாணர்க்கு அரசு அளித்த
ஆண்தகை என்று உன்னை அறியேனோ? - மூண்டு எழுந்த
கார் மாற்றும் செங்கை கடகரி வாணா, உனது
பேர் மாற்றுவது அரிதோ? பேசு! 32

பாணன் மதுரைப் பதி ஆள வைத்த பிரான்
வாணர் புகழ வரும் ஏகம்ப — வாணன்
கரும் போதகமே, நின் கால் பணிவேன் மீண்டு
வரும்போது அகமே வரின். 33

என் சிவிகை; என் கவிகை; என் துவசம்; என் கவசம்
என் பரி ஈது; என் கரி ஈது என்பரே — மன் கவன
மா வேந்தன் வாணன் வரிசைப் பரிசு பெற்ற
பா வேந்தரை வேந்தர் பார்த்து. 34

சேற்றுக் கமல வயல் தென் ஆறை வாணனை யான்
சோற்றுக்கு அரிசி தரச் சொன்னக்கால் — வேற்றுக்
களிக்கு மாவைத் தந்தான்; கற்றவர்க்குச் செம்பொன்
அளிக்குமாறு எவ்வாறு அவன்? 35

---

33. *வாணனை விரும்பிய ஒருத்தி அவன் யானையை நோக்கிப் பாடுவதாக அமைந்தது இச்செய்யுள்.*

34. *கவிகை - குடை; துவசம் - கொடி; கவனமா - வேகமான குதிரை; ஏகம்பவாணன் பிற அரசர்களை வென்று அவர்களிடம் கொண்ட சிவிகை முதலானவற்றைப் பாவலர்க்குப் பரிசாகக் கொடுத்தான் என்பது குறிப்பு.*

தேர், உளைப்புரவி, வாரணத் தொகுதி
  திறை கொணர்ந்து வரும் மன்ன, நின்
தேசம் ஏது? உனது நாமம் ஏது? புகல்!
  செங்கை யாழ் தடவு பாண, கேள்!
வாரும்! ஒத்த குடி நீரும் நாமும்;
  ஏகதேவன் - ஆறைநகர் காவலன்
வாணபூபதி - மகிழ்ந்து அளிக்க
  வெகு வரிசை பெற்று வரு புலவன் யான்.
நீரும் இப்பரிசு பெற்று, மீள வரல் ஆகும்;
  ஏகும் அவன் முன்றில் வாய்;
நித்திலச் சிகர மாடமாளிகை நெருங்கு
  கோபுர மருங்கு எலாம்
ஆரும்நிற்கும்; உயர் வேம்பு நிற்கும்;
  வளர் பனையும் நிற்கும்; அதன் அருகிலே
அரசு நிற்கும்; அரசைச் சுமந்த சில
  அத்தி நிற்கும் - அடையாளமே. 36

அலங்கல் அணி மார்பன் ஆறையர்கோன் வாணன்
விலங்கு கொடு வருக என்றான் - இலங்கிழையீர்
சேரற்கோ, சோழற்கோ, தென் பாண்டி நாடு ஆளும்
வீரற்கோ. யார்க்கோ விலங்கு? 37

---

35. *களிக்குமா - களி கிண்டுவதற்குரிய மா என்றும் மதத்தாற் களிக்கும் யானை என்றும் பொருள்படும்; இகழ்ச்சிக் குறிப்பாக அமைந்த புகழ்ச்சி.*

36. *ஏகம்ப வாணனிடம் பரிசு பெற்றுவந்த புலவனொருவன் மற்றொரு புலவனை வாணன் மாளிகையின் அடையாளம் கூறி ஆற்றுப்படுத்துவதாக அமைந்தது.*
*ஆர் - ஆத்திமரம்; அத்தி - அத்திமரம்,*
*ஆர், வேம்பு, பனை என்பன சோழ, பாண்டிய, சேரர்களையும் அரசமரம் என்பது பிற அரசர்களையும் அத்தி என்பது யானைகளையும் குறிப்பாக உணர்த்தும்,*

வாணன் புகழ்க்கு எல்லை வாழ்த்துவோர் நா எல்லை;
வாணன் செயத்து எல்லை மண் எல்லை; - வாணன்
படைக்கு எல்லை திக்கு எல்லை; பைந்தமிழ் தேர் வாணன்
கொடைக்கு எல்லை ஏற்பவர் தம் கோள். 38

பொன்னிக்கு கம்பர் எழுதிக்கொடுத்த சீட்டை,
சோழன் கம்பருக்குக் காட்டியபோது கம்பர்
'இது பொன்னிக்கல்ல' என்று கூறியது

கன்னி கலச முலையுடையாள் தன் காம,
குரோத பஞ்சத்தில்
என்னுக்கு எழுதிக் கொடுத்தேன் என்று
இயம்பக்கேளாய் இகல் வேந்தே
மின்னுக்கு எழுதி, இடைக்கு எழுதி,
வேண்டும் பொருட்கும் எழுதி, அருள்
பொன்னுக்கு எழுதிக் கொடுத்தேன்;
யான் பொய் உரையேன் - புகழ் வேந்தே. 39

சோழன் தன் நாட்டைவிட்டுப்
போகச் சொன்னபோது பாடியவை

மன்னவனும் நீயோ; வள நாடும் உன்னதோ;
உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்? - என்னை
விரைந்து ஏற்றுக் கொள்ளாத வேந்து உண்டோ?-உண்டோ
குரங்கு ஏற்றுக் கொள்ளாத கொம்பு? 40

காதம் இருபத்து நான்கு ஒழிய, காசினியை
ஓதக் கடல் கொண்டு ஒளித்ததோ? - மேதினியில்
கொல்லி மலைத் தேன் சொரியும் கொற்றவா, நீ முனிந்தால்
இல்லையோ எங்கட்கு இடம்! 41

தன்னை மரியாதை செய்யாத
கொங்கு நாட்டைக் கம்பர் இழித்துப் பாடியது

நீர் எலாம் சேற்று நாற்றம்; நிலம் எலாம் கல்லும் முள்ளும்
ஊர் எலாம் பட்டி, தொட்டி; உண்பதோ கம்பஞ் சோறு;

பேர் எலாம் பொம்மன், திம்மன்; பெண்களோ நாயும் பேயும்;
கார் உலாம் கொங்கு நாட்டைக் கனவிலும் நினைக்க
[ஒணாதே.

கம்பர் வன்னியர் மேற் பாடியது

குமிண்டியும் பண்ணையும் கூட முளைக்கின்ற கொல்லைக்
கம்பை
நிமிண்டியும் ஊதியும் தின்ன வல்லோர் இந்த நீள் நிலத்தில்
துமிண்டியங்காய் தன்னை மொட்டை அம்பால் எய்யும்
சூரர் கண்டீர்
நமிண்டியில் பள்ளிகள் அத்தனை பேர்களும் நல்லவரே. 43

தம்மை உபசரியாதவர்களை நிந்தித்து
வேளாளரைப் புகழ்ந்து பாடியது

செட்டி மக்கள் வாசல் வழிச் செல்லோமே; செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே; - முட்டி புகும்
பார்ப்பார் அகத்தை எட்டிப் பாரோமே; எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்! 44

செல்லன் என்பானின் மனைவி இட்ட
கம்பஞ்சோற்றைப் புகழ்ந்து பாடியவை

கல்லங்காடு தனில் விளையா, கடுக நிலத்தில் தான்முளையா
அல் அங்கு இருந்த கருங்கூந்தல் அணங்குக்கு அணங்குபோல்
ஆவாள்
செல்லன் தேவி, மனைகள் தொறும் தேடித்திரிந்தும்
காணாத
நெல்லஞ்சோறே, கம்பஞ்சோற்றினை நீ சுமந்து திரி
[வாயே!

மேழி பிடிக்கும் கை; வேல் வேந்தர் நோக்கும் கை;
ஆழி தரித்தே அருளும் கை; - சூழ்வினையை
நீக்கும் கை; என்றும் நிலைக்கும் கை; நீடுழி
காக்கும் கை; – காராளர் கை. 46

---

46. *மேழி - கலப்பை; ஆழி - மோதிரம்; காராளர் - உழவர்*

வேலி என்பவள் நெல்லைக் கூலியாகத் தருவதாகக் கூறி, பலரைக் கொண்டு சுவர் கட்டுவித்து அதனைப் பிரம்மராட்சசியால் விழச்செய்து கூலி கொடாமலே அனுப்பியதைக் கண்ட கம்பர் பாடியது.

மல்கொண்ட திண்புயத்தான் மாநகர் விட்டு இங்கு வந்து
சொல் கொண்ட பாவின் சுவை அறிவார் இங்கு இலையே!
வில் கொண்ட வாள் நுதலாள் வேலி தரும் கூலி
நெல் கொண்டு போம் அளவும் நில்லாய் நெடுஞ்சுவரே! 47

சேரனுடன் நெருங்கிய நட்புக்கொண்டிருந்த கம்பர் ஒரு நாள் அவனுடைய போர்வையைப் போர்த்திக்கொண்டு படுத்திருந்த போது அது சேரனே என்று எண்ணிய அவன் மனைவி கூடப் படுத்தபோது பாடியது.

தேரையார் செவ்விளநீர் உண்ணாப் பழி சுமப்பர்;
நாரியார் தாம் அறிவார் நாம் அவரை நத்தாமை;
கோரைவாய்ப் பொன் சொரியும் கொல்லி மலை நல்நாடா,
ஊரை வாய்மூட உலை மூடிதான் இல்லையே! 48

கம்பர் மகன் அம்பிகாபதி, சோழன் மகளைக் கண்டு அவளைப் புகழ்ந்து பாடமுற்பட்டபோது கம்பர் இடைமறித்துப் பாடற் பொருளை மாற்றி அம்பிகாபதியைக் காப்பாற்றிய அடிகள்.

[இட்ட அடி நோவ, எடுத்த அடி கொப்புளிக்க,
வட்டில் சுமந்து மருங்கசைய] - 'கொட்டிக்
கிழங்கோ கிழங்கு' என்று கூறுவாள் நாவில்
வழங்கு ஓசை வையம் பெறும். 49

சோழன் மகளைக் காதலித்த குற்றத்துக்காக அம்பிகாபதி மரண தண்டனைக்கு ஆளானபோது அவனைப் பார்த்துப் பாடியது

இந்தநாள் இது விளையும் என்று எழுத்துத்தான் இருக்க
என்னாலே ஆவதொன்றும் இல்லையே - உன்னாலே

---

49. அடைப்புக் குறிக்குள் உள்ளது அம்பிகாபதி பாடியதாகக் கூறப்படும் பகுதி.

வந்தது தான் அப்பா ! மகனே, தவிர்ப்பவர் ஆர்?
-முந்தை நீ செய்த வினையே. 50

அம்பிகாபதி இறந்த போது கம்பர் பாடியவை

மட்டுப் படாக் கொங்கை மானார் கலவி மயக்கத்திலே
கட்டுப்பட்டாய்; என்ன காதல் பெற்றாய்? மதன் கை அம்
[பினால்
பட்டுப்பட்டு ஆயினும் தேறுவையே என்று பார்த்திருந்தேன்;
வெட்டுப்பட்டாய், தலை நாளின் விதிப்படியே! 51

பரப்பு ஓது ஞாலம் ஒரு தம்பி ஆள, பனிமதியம்
துரப்போன் ஒரு தம்பி பின்வர, தானும் துணைவியுடன்
வரப்போன மைந்தர்க்குத் தாதை பொறாது உயிர்மாய்ந்த
[னன்! நெஞ்சு
உரப்போ? எனக்கு இங்கு இனி யார் உவமை உரைப்ப
தற்கே!

காளிகோவிலில் நடந்ததைக்
கம்பர் வீட்டிலிருந்து பாடியது

கரைக்கு வடக்கு இருக்கும் காளி காளம்மைக்கு
அரைத்து வழி சாந்தைத் தொட்டபேய் - உரைத்தும்
மறைக்க அறியாதவன் பேயின் கையைக்
குறைக்குமாம் கூன் கத்தி கொண்டு. 53

வேளாளரைப் புகழ்ந்து பாடியது

காலப் புயல் நிகர் காராளர் தம்மை, கடல் உடுத்த
தாலக் குலமங்கை பெற்றதனால், சதாகாலமும் மால்,

---

52: *'பரதன் நாடாள, இலக்குவனுடனும் சீதையுடனும் இரா மன் வனம் போவது பொறுக்காது தசரதன் உயிர் நீத்தான்; நான் மகன் இறந்தும் உயிரோடு இருக் கிறேனே! என்னே என் நெஞ்சுரம்!' என்பது பொருள்.*

கோலத் திரு முகத்தாலே முகந்தனன்; கூடலிலே
சூலக் கரப்படையான் தலைமீது சுமந்தனனே! 54

கம்பனையும் தன்மனைவியையும் சந்தேகித்து, கம்பனைத் தாக்க வந்த கைக்கோளன் ஒருவனை நோக்கிப் பாடியது

மைக்கு இணையான விழிக்கணை கொண்டு
மருட்டி, இருட்டு அறையில்
பொய்க்களவாகப் புகுந்ததும் உண்டு;
புணர்ந்ததும் இல்லையடா;
கைக்கு இசைவான குறும் தடி கொண்டு
கழுத்தை நெரிக்கவரும்
கைக்களவா, என் தங்கையடா; நின்
தாரமடா; விடடா! 55

அதுபோலவே வலையன் ஒருவனை நோக்கிப் பாடியது

இருளை இருள் விழுங்கி எவ்விடமும் தோன்றாது
இரு விழியும் கோல்வழியே செல்ல - வரும் எல்லை
வந்தது உண்டு; சேர்ந்தது இல்லை; மாலே அல்லாமலே
அந்தமனை உந்தன் மனையே! 56

தான் இறக்கும்போது கம்பர்
சோழனை நோக்கிப் பாடியது

வில் அம்பு, சொல் அம்பு மேதினியில் இரண்டு உண்டு
வில் அம்பிற் சொல் அம்பே மேல் அதிகம் - வில்லம்பு
பட்டதடா என்மார்பில்! பார் வேந்தா, நின் குலத்தைச்
சுட்டதடா என் வாயிற் சொல்! 57

---

54: வராக அவதாரத்தின் போது திருமால் பூமியைத் தன் முகத்தால் தாங்கினன்; மதுரையில் சிவன் பிட்டுக்கு மண் சுமந்தபோது தலையிலே தாங்கினன்.
தாலக்குலமங்கை - பூமாதேவி.

சடையப்பவள்ளலைப் புகழ்ந்தது

மெய் கழுவி வந்து விருந்து உண்டு மீளுமவர்
கை கழுவு நீர் போலும் காவிரியே, - பொய் கழுவும்
போர் வேள் சடையன் புதுவையான் தன் புகழை
யார் போற்ற வல்லார் அறிந்து. 58

திருவொற்றியூர்க் கணிகையை வியந்தது

''இல்'' என்பார் தாம் அவரை யாம் அவர்தம் பேர் [அறியோம்
பல் என்று, செவ்வாம்பல் முல்லையும் பாரித்து
''கொல்'' என்று காமனையும் கண் காட்டி ''கோபுரக்கீழ்
நில்'' என்று போனார் என் நெஞ்சை விட்டுப் போகாரே! 59

விரகத்தினாற் கூடிய தாசியைப் பழித்தது

சொல்லியை, சொல்லின் அமுதான செல்வியை, [சொற்கரும்பின்
வில்லியை, மோகவிடாய் தவிர்ப்பாளை விழிஅம்பினால்
கொல்லியை, கொல்லியப் பாவை ஒப்பாளை, குளிர் [ஒற்றியூர்
வல்லியைப் புல்லிய கைக்கோ இவர் வந்து வாய்ப்பதுவே! 60

இராமாயணம் எழுதியபோது
பந்தம் பிடிக்கப் பாடியது

ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே,
வெற்றி ஊர் காகுத்தன் மெய்ச்சரிதை — பற்றியே
நந்தாது எழுதுதற்கு நல்இரவில் மாணாக்கர்
பிந்தாமல் பந்தம் பிடி. 61

---

61. காகுத்தன்— இராமன்

தான் இறக்கும்போதில்
சடையப்பன் நன்றியை நினைத்தது

ஆன்பாலும் தேனும் அரம்பை முதல் முக்கனியும்
தேம்பாய உண்டு தெவிட்டு மனம் — தீம்பாய்
மறக்குமா? வெண்ணெய் வருசடையா, கம்பன்
இறக்கும் போதாயும் இனி. 62

காவிரி பெருக்கடங்கப் பாடியது

கன்னி அழிந்தனள்; கங்கை திறம்பினள்;
பொன்னி கரை அழிந்து போனாள் என்று — இந்நீர்
உரை கிடக்கலாமோ? உலகுஉடைய தாயே,
கரை கடக்கல் ஆகாது காண்! 63

வாணியன் தாதன் என்ற புலவன்
விருதுகாளம் பிடிக்கப் பாடியது

கூளம் பிடித்து எள்ளின் கோதுவைப்பான் நம் குலக் கவிக்கு
காளம் பிடித்திடில் சின்னம்படும் மன்னர் காதலிமார்
வேள் அம்பு இடித்த கண், வெள்ளம் பிடிக்க, எம்
[பேய்க்கிளம்பேய்
தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே! 64

வாணியன் தாதனைப்பாடியது

தாதா என்றாலும் தரு என்று சொன்னாலும்
தா, தா! என்றாலும் தருவனோ தாராதான்?
தாதா என்றாலும் தரு என்று சொன்னாலும்
தா, தா! என்றாலும் தருவன் நம் தாதனே. 65

---

62. அரம்பை— வாழை
63. கன்னி — குமரியாறு; இந்நீர் உரை— இத்தகைய பழிச்சொல்
64. வேள் அம்பு இடித்தகண்— காமவேளின் அம்பாகிய பூவை வென்றகண்; காளம் பிடித்தல்— எக்காளம் ஊதுதல்;
65. தாதா— கொடைவள்ளல்; தரு—கற்பகத்தரு; தா, தா!— கொடு, கொடு! தாதன் — வாணியன் தாதன்.

கம்பர் பாண்டியனோடு இருந்த காலத்தில், கர்பரை அழைத்து வருமாறு, சோழன் அனுப்பிய இணையார மார்பனை 'இவன் யார்?' என்று வினவிய பாண்டியனுக்குக் கம்பர் பாட்டாலே கூறிய பதில்

என்னுடைய தம்பி; சரராமனுக்கு இளையான்;
கன்னன்; மதயானைக் கண்டன் மகன் — துன்னு
பனையார் நீர் வேலிப் பழனம் சூழ் சோணாட்டு
இணையார மார்பன் இவன். 66

தன்னை ஓம்பிய ஓரங்கல் நாட்டு மன்னன்
பிரதாபருத்திரனைப் புகழ்ந்தது

அவனி முழுது உண்டும், அயிராவதத்து உன்
பவனி தொழுவார் படுத்தும் — புவனி
உருத்திரா! உன்னுடைய ஓரங்கநாட்டில்
குருத்து இரா வாழைக் குலம். 67

காளிங்கன் என்பவனிடம் எருமை வேண்டி
அவனைப் புகழ்ந்து பாடியது

புக்குவிடை தழுவிக்கொண்டு உழுதபுண் எல்லாம்
திக்கில்உறை காளிங்கன் தென்புகழன் மான், — அக்கணமே
தோள்வேது கொண்டிலளேல், சுந்தரப் பொன்தோன்றலுக்கு
வாழ்வு ஏதும் கொண்டிலமே மற்று. 68

---

66. *சரராமன்— சடையப்ப வள்ளல்; கன்னன்— கொடையில் கன்னனை ஒத்தவன், கண்டகன்— சடையப்பரின் தந்தை;*

67. *அவனி முழுது உண்டும்— உலகிலுள்ளார் அனைவரும் வந்து உண்பதனாலும்; அயிராவதம்— பிரதாபருத்திரனது யானை; தொழுவார்— தொழும் மகளிர்; படுத்தும்— காமவேட்கையால் எழுந்த வெப்பம் தணிய வாழைக் குருத்தைப்பரவி அதன்மேற்படுப்பதனாலும்*

68. *விடை தழுவி— கொல்லேறு தழுவி; மான்- மான் போன்றவள் (காளிங்கன் காதலி;) வேது— ஒத்தடம்*

மயிலாப்பூரில் வாழ்ந்த திருவாலி என்ற
தட்டானைப் பாடியது

அண்ணல் திருவாலி அணி மயிலை அத்தனையும்
வெண் நிலவின் சோதி விரித்ததே — நண்ணும்
தடம், துப்பு, வில், பாணம் தன்முகத்தே கொண்டு
நடந்து உப்பு விற்பாள் நகை. 69

அதிகாரியை வெட்டுவிக்கப் பாடிய வழுப்பாட்டு

சென்னி விளை கழனி செஞ்சிவாழ் சோழாண்டே
மன்னு புகழ் ஒற்றியூர் மட்பக்க நாச்சியார்
தம்மை வரவிட்ட பூழமோ பூழல். 70

களத்தூர்த் தேவதாசியைச் சிறப்பித்தது

வில்லி களந்தை மின்னை. விண்ணவர்தம் கோமானை,
வல்லி நெடும் சேடனையும் வாணனையும் - புல்லி உறப்
பார்க்கும்போதும், அதரம் பற்றும்போதும், தனத்தைச்
சேர்க்கும் போதும், நினைப்பம் சென்று. 71

---

69. தடம்— குளம்[குளம் போன்ற நெற்றி]; துப்பு— பவளம் [பவளம் போன்ற வாய்]

70. இப்பாடல்பற்றிய குறிப்பிலும் பாடற்சொற்களிலும் தெளிவில்லை.

71, கோமான் - இந்திரன்- இவன் ஆயிரம் கண்களை உடையவன்; சேடன் - ஆதிசேடன் - இவன் ஆயிரம் நா உடையவன்; வாணன் - இவன் ஆயிரம் கை உடையவன். அவளைப் பார்க்கும் போதும் அதரம் சுவைக்கும் போதும், அணைக்கும் போதும் ஆயிரம் கண் முதலியன இல்லையே என்று இந்திரன் முதலியோரை எண்ணி இரங்குவோம் என்பது குறிப்பு.

நெற்பயிர் விளை கழனி நெல் மலி வாழ் தச்சன்
கற்படு திண் தோளன் கங்கண கணகன வன்
வில் புரை திரு நுதலாள் மின்மினு மினுமினுமி
சொற்படி வேலை செய்வாள் துந்துரு துரு துருமி 72

வாளை தூக்கிய வலையனைப் பாடியது

பந்தரிலே வாளை தூக்கும் பனையன் மகன் சோரன்
தங்களது வீட்டில் இருந்தாலும் - தங்களது
ஆத்தாள் தன் வீட்டில் இருந்தாலும் இருந்தான் 73

காளியின் அருள்கொண்டு தான் காவல் செய்த
கொல்லையைத் தின்ற காளிங்கராயன் என்பவரின்
குதிரை இறக்கப் பாடியது

வாய்த்த வயிராபுர மாகாளி அம்மே, கேள்!
காய்த்த தினைப் புனத்தில் கால்வைத்து - சாய்த்து
கதிரை மாளத்தின்ற காளிங்கராயன்
குதிரை மாளக் கொண்டு போ! 74

குதிரை உயிர் பெறுதற்காக மாற்றிப் பாடியது

வாய்த்த வயிராபுர மாகாளி அம்மே, கேள்!
காய்த்த தினைப் புனத்தில் கால்வைத்து - சாய்த்து
கதிரை மாளத்தின்ற காளிங்க ராயன்
குதிரை மீளக் கொண்டு வா! 75

---

72. *இப்பாட்டுக்கு உரிய வரலாறு தெரியவில்லை,*
73. *இது வழுக்கள் நிறைந்ததொரு பாட்டு.*
74, 75. *இவை பாவலர் சரித்திர தீபகத்தில் எடுக்கப்பட்டவை;*
*பொய்யாமொழிப் புலவராற் பாடப்பட்டன.*
*என்று தனிப்பாடல் திரட்டுக் கூறுகிறது.*

# திருக்கை வழக்கம்

கங்கை குலந்தழைக்கக் காட்டும் பெருங்கீர்த்தி
மங்கை பிரியாமல் வாழுங்கை - திங்களணி
எம்பிரான் எம்பெருமான் இந்திராதி பர்க்கரிய
தம்பிரா னுக்குரைத்த சந்தனக்கை - அம்பொன்
வளைவாரி வையகமும் வானகமும் போற்ற
முளைவாரி வந்த முழுக்கை - கிளைவாழக்
கச்சித் தலத்தரனைக் கல்லால் எறியமறந்
தெச்சில் தயிர்ச்சோ(று) எறியுங்கை - பச்சைமிகு
தேமா வடுக்கமரீற் சிந்திற்றென் றேகழுத்தை
யாமா வெனவே அரியுங்கை - வாமமறை
ஓதுபுகழ் நாயனுடன் ஊரன் புறமென்றே
மோதுதடி கொண்டு முடுக்குங்கை - தீதகல
அஞ்செழுத்தே யொன்றாகி அப்பரெனத் தோன்றியரன்
செஞ்சரணத் தேபூசை செய்யுங்கை - வஞ்சியர்பால்
தூதரனைத் தான்விடுத்த சுந்தரனைக் காணாமல்
பேதமறத் தன்வயிறு பீறுங்கை - கோதகன்ற
சேர்ந்த மணவாசல் சிவனடியார்க் காமகடன்
கூந்தலரிந் தேமகிழ்ந்தே கொடுக்குங்கை - ஏந்தரிய
வட்டால் உறுபொருளால் வந்ததொண்டர்க் காமூர்க்கர்
தட்டா தமுதளிக்கும் தங்கக்கை - எட்டாது
போக்கு வரவற்ற பூரணனை நிந்திப்பார்
நாக்கை யரிந்துபுகழ் நாட்டுங்கை - ஆக்கையுறு
தாயிலார் தந்தையிலார் தம்மைமனத் துள்வைத்து
வாயிலார் பூசிக்கும் வாகுளகை - ஆய
வினையடு வாராகி விறல்கொள் பொருளை

# பின்னிணைப்பு

இந்நூலில் தொகுக்கப்பட்ட ஏரெழுபதோடு ஒப்புநோக்கும்போது மிகுந்த வேறுபாடுடையதாகக் காணப்படும், ஏரெழுபதின் இன்னொரு பிரதி கிடைக்கப்பெற்றது. அதனை அப்படியே முழுமையாக இங்கு தருகின்றோம்.

முனையடுவார் நல்கிய முன்கை - வினையகல
அன்றுவரும் மாதவருக்(கு) ஆக்கியமாங் கனிகேட்க
ஒன்றவரு வித்தளித்தே ஓங்குங்கை - நின்றதுலாக்
கோலாலக் கோவணத்துக் கள்வர்தங் கோண்முழுதும்
ஆலாவ ளந்தறிந்த மாண்புளகை - யேலவார்
கூந்தலாள் தன்னைக் குலமறையோர்க் கீந்தொக்கல்
ஏந்துவா ளாலேவிண் ஏற்றுங்கை - சாந்தமுற
ஓது பரனை உணர்த்துஞ் சிவாகமங்கள்
வேதபுரா ணங்கள் விரிக்குங்கை - தீதில்
அருமறையைச் செந்தமிழால் அப்ப ரெனவந்து
திருமுறைக ளாச்சேர்க்குஞ் செங்கை - பெருமையுடன்
ஏதமில் வேதத்தை எடுத்தே சிவாலயத்துள்
ஓதுவா ராய்வந்தே ஓதுங்கை - காதலுடன்
வேதமொரு நான்கினையும் மிக்கதமிழ் நாலடியால்
ஓதியுரைத் தேயுலகில் ஒளிருங்கை - போதமுற
வேள்வியோ ரைந்தோடு வேளாளத் தோமமுமே
ஆள்வினை யாலெடுத் தாளுங்கை - நீணிலத்துள்
ஆன்படு நெய்விட் டளவிலா வாகுதியால்
வான்படச்சை வத்தீ வளர்க்குங்கை - மேம்படவே
கல்லார்கள் என்னாமற் கற்றோர்கள் என்னாமல்
எல்லாரை யுங்காத்தீ டேற்றுங்கை - வல்லமைசேர்
மைம்மா முகிலுலகை வாழ்விக்கு மேன்மைபோல்
கைம்மா றிலாதளிக்கும் கற்பகக்கை - சும்மையார்
ஊருணி நீர்போல் உலகத் தவர்க்கெல்லாம்
பேரறிவா லீயும் பிரதாபக்கை - பாரில்
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
கொடுக்க விசைந்த குளிர்க்கை - யிடுக்கணினான்
மாமறையோர் மன்னர் வருவினைஞர் சங்கரர்க்குந்
தாமலையா மற்கொடுத்துத் தாங்குங்கை - மாகளத்து
ஏற்கவந்த ஆதுலருக்(கு) இல்லையென் னாதுநெல்லை

கார்க்கையினான் முக்கையிட்ட கற்பகக்கை-தீர்க்கமுடன்
செம்பொன் விளைகளத்தூர் செந்நெல் விளைந்ததனை
நம்பிமறை யோர்க்களித்த நாணயக்கை — அம்பொற்
பார்பூட்டு மன்னர் பரிகரிபூட் டக்கதிரோன்
தேர்பூட்ட ஏர்பூட்டும் செம்பொற்கை — வீரமதன்
ஐங்கோல் தொடுக்க அணைகோல் எடுக்கவுழும்
பைங்கோல் பிடிக்கும் பதுமக்கை — இங்கிதமாம்
சீர்படைத்த பூபாலர் செங்கோல் பிடிப்பதற்குப்
பேர்படைத்த மேழி பிடிக்குங்கை — கார்படைத்த
மிஞ்சுமதி கீர்த்தியைப்போன் மேதினியெல் லாந்தழைக்கச்
செஞ்சாலி நாற்றைத் தெளிக்குங்கை — எஞ்சாமல்
வெள்ளைக் களைகளைந்து வீறும் பயிர்தழைக்க
கள்ளக் களைகளைந்த கற்பகக்கை — வள்ளுறையும்
விற்போர் மதகரிப்போர் வெம்பரிப்போர் வெற்றிப்போர்
நெற்போர் முதற்போர் நெரித்திடுங்கை — பற்பலவாம்
காணி உழுதுண்டு கழிபொருளெல் லாங்கொண்டு
வாணிபங்கள் செய்தங்கு மாற்றுங்கை — மாணிவர்ந்த
ஐந்திணையின் பொருள்யாவும் அறத்தாலே தாம்தேடித்
தந்திணையில் வந்தணையத் தாங்குங்கை — முந்திப்
பிறர்பொருளுந் தம்பொருள்போற் பேணிமூன்
[றாமெனவே

அறவளவை யாலளக்கும் அங்கை — திறமுடனே
ஊர்காக்கு மரசுக்(கு) உறுதியுழவாம் அதற்காய்
ஆள்காப்பே காப்பாக ஆளுங்கை — வான்சுவைபோல்
எண்ணை எழுத்தை இசையை இலக்கணத்தை
வண்மைபெற உண்டாக்கும் வாகுளகை - நுண்மையதாய்
மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென
எண்ணிஎழு திக்கொடுத்த ஏற்றக்கை — திண்ணமதாய்
மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானந் தருமந் தழைக்குங்கை - ஈனமிலா

தொடையில் எழுஞ்சிலந்தித் தோற்றுவிக் கப்பட்டின்
புடைவை கிழித்த பெருங்கை - துடவைதனில்
ஏரெழுப தோதியரங் கேற்றுங் களரியிலே
காரிவிட நாகம் கடிக்குங்கை - பாரதனில்
நாவிற் புகழ்கம்ப நாடற் கடிமையென்றே
மாவைக் கரைத்துமுன்னே வைக்குங்கை - ஆவலுடன்
சங்கையிட்டுத் தள்ளாமல் தன்சோற்றை வந்தவறகுப்
பங்கையிட்டி ரட்சித்த பங்கயக்கை - பொங்கமுடன்
பொன்னா லமுதும் பொறிக்கறியுந் தான்கொணர்ந்து
நன்னா வலர்க்களித்த நாணயக்கை - பன்னரிய
வையகமெங் குந்தேடி வந்தமி ழோன்புகழச்
செய்யமுடி யைக்கொடுத்த செம்பொற்கை—துய்யபுகழ்
அன்றீந்த நாகெழுப தானவெரு மைத்திறத்தைக்
கன்றோடு நல்குங் கடகக்கை - வென்றிதரும்
ஓரானை நூறா யிரக்கலநெல் லோர்கவிக்குச்
சீராக நல்குந் தியாகக்கை - நேரா
எறும்புக்கும் ஆஸ்பதந்தான் இல்லையென்ற மட்டில்
திறம்புக்க யானைதருஞ் செங்கை - அரும்புதனில்
எண்ணா யிரமுனிவர்க்(கு) ஏற்றபடி அப்படியே
பண்ணா கக்கொடுக்கும் பராக்கிரமக்கை - விண்ணாடர்
மூக்கிற் புகைபுரிந்த மூதாவின் வாயிடத்து
நீக்கியபை நாக்கதனில் நீட்டுங்கை - ஊக்கமுடன்
பாவல னெச்சில் படுமாங் கனியெடுத்து
ஆவலுடன் நன்றாய் அருந்துங்கை - தாவரிய
வண்டமிழோன் தானுதைத்த வாகுளகா லுக்குப்பொன்
வெண்டயமிட் டேவணங்கும் வெற்றிக்கை - புண்டரிகக்
கையாற் புலவன் கனகமுடி மேற்சூட்டச்
செய்யாழி பண்ணியிட்ட தீரக்கை - பையவே
மிக்கபுல வனுக்காக வேசிமனை மட்டாகத்
தக்கசிவி கைக்கணை தாங்குங்கை - ஒக்குமென

ஏதமற்ற கீர்த்தியைக்கொண் டேட்டகத்தி லேயடிமைச்
சாதனமிட் டேகொடுத்த தங்கக்கை - மேதினியிற்
சூலி முதுகிற் சுடச்சுடவப் போதுசமை
பாலடிசில் தன்னைப் படைக்குங்கை - சாலவே
நாணந் தராமல் நடுங்காமல் கூசாமல்
பாணன் பிணத்தைப் பரிக்குங்கை - காணவே
தண்டமிழோன் தன்மனத்திற் சந்தேகந் தீரக்கூழ்
உண்டவயிற் றைப்பீறி யூற்றுங்கை - கண்டளவில்
வன்னி யிடைமூழ்கி வானோர் பழிகழுவிக்
கன்னிதனை யேமணந்த காட்சிக்கை - துன்னுமொரு
பேருலகை யெல்லாம் பிழைப்பிக்கும் ஓர்கொழுவின்
கூரிலொரு வன்கழுத்தைக் குத்துங்கை - பாரறிய
திருப்பருத்திக் குன்றிற் சிவனால யங்கள்
விருப் புடனேகட்டி வீறுங்கை - பருப்பதம்போல்
அட்டதிக்கும் எண்கீர்த்தி ஆயிரத்தெட் டானைதனை
வெட்டிப் பரணிகொண்ட வீரக்கை - திட்டமுடன்
கூர்த்த புகழண்ட கோளமட் டும்படர
நாற்றிக்கு மேருவினில் நாட்டுங்கை - ஆர்த்தபுகழ்
மேழிக் கொடிசிங்க வெற்றிக் கொடிகுயிலின்
வாழிக் கொடியே மருவுங்கை - நீளுலகில்
சாற்றுமொட்டக் கூத்தன் சரசகவி சொல்லப்பால்
ஆற்றுநீர் கொண்டுவந்த ஆண்மைக்கை - நேர்த்திபெற
விளைபயிரைப் பார்த்து விரைக்கால் புலத்தை
வளையமதி லிட்டு வருங்கை - தளையவரும்
நீலி தனக்கஞ்சி நின்றவணி கேசனுக்காக்
கோலி யபயங் கொடுக்குங்கை — மேலச்சம்
வீறுபெறும் பறையன் வீயாம லோர்கலத்தில்
சோறுபிசைந் துண்ட சுடர்மணிக்கை — பேறுறும்
பேர்காக்க இந்திரற்காப் பேசுபிணை என்றிறைமுன்
கார்காக்கும் ஒப்பில் கமலக்கை — தீர்வில்

மனக்கவலை யுற்றவணி கன்முன்னே னின்று
தனைக்கா வெனக்கேட்ட தற்கை — வனக்குன்றின்
மங்கையொரு பாகற்கும் மன்னவர்க்கும் மாதவர்க்கும்
துங்கமணி முடியைச் சூட்டுங்கை — அங்கண்
தலாபாரந் தாங்கும் தனியரசும் பொன்னும்
துலாபாரந் தட்டினில் தூக்குங்கை — இலாபமுறும்
பண்டுமுடி நாவிதனால் பற்றற்பாற் றன்றென்றே
கொண்டைகட்டிக் கொண்டாளுங் கோமளக்கை —
[பண்டையதாம்
ஏட்டாருந் தொண்டநாட்(டு) எழுபத்தொன் பானாகும்
நாட்டாரென் றேபுகழை நாட்டுங்கை — வாட்டமிலா
ஆர்த்த குடிமக்கள் அறுமூவர்க் காம்வழக்கைத்
தீர்த்தெழுதி ஒட்டகத்திற் சேர்க்குங்கை — சீர்த்த
தொகாநாட்டார் கூடித் துரைக்கெழுது மேட்டில்
மகாநாட்டா ரென்றுவைக்கும் வண்கை — சுகமயமாய்
உள்ளங் குழைந்தாய் உழவாற் பெருக்கவிதை
பிள்ளையெனக் கேயுதவப் பேணுங்கை — வள்ளல்
கதமிறொண்டக் காவலன் காமுறு மக்கட்குள்
முதலியெனப் பேர்படைத்த முன்கை — சிதமாய்
உசாவு கடல்கடைய வோடதி யீந்து
தசாங்க மிறைநல்கத் தாங்குங்கை — நிசாங்கமதாய்
சங்கருகு தீவட்டிச் சாமரைப தாகைகுடை
பொங்குதொண்டன் நல்கப் புரக்குங்கை — கங்குல்பகல்
நடக்க யிருக்கை நகைக்கை மிடிதீர்க்கை
கொடுகை செழுங்கை குளிர்க்கை — தொடுத்ததெல்லாஞ்
சீராக வுண்டாக்குஞ் செங்கைப் பெருங்கருணைக்
காராளர் கற்பகப்பூங் கை.

○ ○ ○



உ

"உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் – அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே."

— கம்பன் —